



# தமிழ் 8K எக்ஸ்பிரஸ்

வட அமெரிக்கத் தமிழர்களின் குரல்!

ஜூலை 2018
தமிழ் மாத இதழ்

## 4 – ஆம் ஆண்டை நோக்கி...
## 8கே தமிழ் எக்ஸ்பிரஸ்
## 8கே ரேடியோ தமிழ்

APP




"ஓடவும் முடியாது!
ஒளியவும் முடியாது!"
வீட்டுக்கே வந்து கொடுப்போம்!

விவரம் உள்ளே



# வணக்கம் நண்பர்களே!

"மனதில் உறுதி வேண்டும்... வாக்கினிலே இனிமை வேண்டும்
நினைவு நல்லது வேண்டும்... நெருங்கினப் பொருள் கைப்பட வேண்டும்
கனவு மெய்ப்பட வேண்டும்"என்றான் பாரதி.

"கனவு மெய்ப்பட வேண்டும்" என்ற பாரதியின் வாக்குக்கு ஏற்ப, வட அமெரிக்காவின் தவிர்க்க முடியாத பொழுதுப்போக்கு சக்தியாக, "8கே மைல்ஸ் மீடியா" நிறுவனம் விளங்க வேண்டும் என்ற என் கனவு, மெய்ப்பட்டுக் கொண்டிருக்கிறது. 8கே மைல்ஸ் மீடியா நிறுவனம், மாபெரும் வளர்ச்சிப் பாதையில் பயணித்து கொண்டிருக்கிறது.

தாய் மண்ணை விடுத்து 8 ஆயிரம் மைல்களை கடந்து இங்கு வாழும் தமிழ்ச் சொந்தங்களை மகிழ்விக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு தான் 8கே மைல்ஸ் மீடியா நிறுவனம் தொடங்கப்பட்டது. 2015ஆம் ஆண்டு ஜுலை மாதம் நடைபெற்ற, வட அமெரிக்க தமிழர்களின் திருவிழாவான "பெட்னா" விழாவில், தமிழ்ச் சொந்தங்களின் முன்னிலையில், 8கே ரேடியோவும், 8கே தமிழ் எக்ஸ்பிரஸ் இதழும் தொடங்கப்பட்டன.

வட அமெரிக்க தமிழர்களின் ஓய்வு நேரங்கள், மகிழ்சியுடனும், அதே சமயம் பயனுள்ளதாகவும் அமைய வேண்டும் என்ற லட்சியத்துடன், "மைல்ஸ் கம்மி, ஸ்மைல் ஜாஸ்தி" என்பதை தாரக மந்திரமாகக் கொண்டு தொடங்கப்பட்ட 8கே ரேடியோவும், வட அமெரிக்க தமிழர்களின் குரலாய் ஒலிக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு தொடங்கப்பட்ட 8கே தமிழ் எக்ஸ்பிரஸ் இதழும் 4ஆம் ஆண்டில் அடியெடுத்து வைக்கின்றன.

இந்த நேரத்தில், கடல் கடந்தும் ஓரினமாய், தனித்திறனாய், உணர்விலும் உயிரிலும் கலந்து நிற்கும் தமிழ்ச் சொந்தங்கள் தொடர்ந்து கொடுத்து வரும் ஆதரவுக்கு, 8கே மைல்ஸ் மீடியா குழுமம் சார்பில் மகிழ்ச்சியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த மூன்று ஆண்டுகளில், வட அமெரிக்கா முழுவதும் உள்ள லட்சக்கணக்கான தமிழ் சமுதாயத்தினரின் அன்பை பெற்றிருக்கிறோம். தமிழர்களின் வீடுகளில் 8கே ரேடியோ மூலமாகவும், 8கே தமிழ் எக்ஸ்பிரஸ் இதழ் மூலமாகவும் நுழைந்து இருக்கிறோம். வட அமெரிக்காவின் தவிர்க்க முடியாத பொழுதுப்போக்கு சக்தியாக மாறியிருக்கிறோம்.

8கே மைல்ஸ் மீடியா நிறுவனம், அடுத்தடுத்த மைல்கற்களை கடந்து மாபெரும் வளர்ச்சி பெற்று வருகிறது. இந்த நீண்ட பயணத்தில், வட அமெரிக்காவில் வசிக்கும் இந்திய மற்றும் தமிழ் சொந்தங்களாகிய நீங்களும், எங்களின் கரம் கோர்த்து, ஆதரவு கொடுத்து வருவது, மிகுந்த உத்வேகத்தையும், உற்சாகத்தையும் கொடுக்கிறது.

8கே ரேடியோ தமிழ், 8கே தமிழ் எக்ஸ்பிரஸ் இதழ் ஆகிய இரு பொழுதுப்போக்கு நிறுவனங்களோடு ஆரம்பிக்கப்பட்ட நமது நிறுவனம், தற்போது 8கே ரேடியோ இந்தி, 8கே ரேடியோ தெலுங்கு மற்றும் 45 ஆண்டுகள் பழமையான முதல் இந்திய பத்திரிகையான "India Abroad" weekly எனப் புதிய நிறுவனங்களுடன் வளர்ச்சி அடைந்து கொண்டே போகிறது.

8கே மைல்ஸ் மீடியா நிறுவனம் சார்பில், பல்வேறு திரைப்படங்களை வெளியிடுவதோடு, நிறைய கலைநிகழ்ச்சிகளையும் நடத்தி வருகிறோம்.

இந்த அத்தனையும், வட அமெரிக்காவில் வசிக்கும் இந்திய மற்றும் தமிழ் சமூகத்தினராகிய நீங்கள் வழங்கும் ஆதரவினால் தான் என்றால் அது மிகையாகாது.

8கே மைல்ஸ் மீடியா, உங்களுடன் கரம் கோர்த்து பயணித்து கொண்டிருக்கும் இப்பொன்னான தருணத்தில், எங்கள் குழுமம் சார்பாக நெஞ்சம் நிறைந்த நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

என்றும் அன்புடன்

**சுரேஷ் வெங்கடாச்சாரி**

**Chairman**

**8K Miles Media Group, Inc., USA**

8K தமிழ் எக்ஸ்பிரஸ்
வட அமெரிக்கத் தமிழர்களின் குரல்!

Volume : 4 Issue : 1 July 2018

முதன்மை ஆசிரியர்
**C. ஹரிகிருஷ்ணன்**

ஆசிரியர் குழு
**R.S. ரமணி**
(சென்னை)

**கோவிந்தன் சோமஸ்கந்தன்**
(ஹூஸ்டன்)

**ராம் முத்து**
(டல்லாஸ்)

ஒருங்கிணைப்பாளர்கள்
**உமா ரவி**
(கலிபோர்னியா)
Cell : 1-916-213-7533

**மாதவி குணசேகரன்** (அட்லாண்டா)
Cell : 775-285-6234.

**Sub-Editor**
SHAHARAA SUBBURAJU

**Designer**
S.NANDHINI

விளம்பரம் மற்றும் ஏனைய தொடர்புக்கு:
4309, Hacienda Drive, Suite 150 Pleasanton,
CA 94588, USA.
E-mail : editor@8ktamilexpress.com
advt@8ktamilexpress.com
Cell : 1-732-515-7187

**Sales Head - India**
MOSES PHILIP
Cell : 91-98840 49573
mosesp@8kmilesmedia.com

**Editor In Chief**
C.HARI KRISHNAN
hari@8ktamilexpress.com

**Director**
LENA KANNAPPAN

**CHAIRMAN & PUBLISHER**
SURESH VENKATACHARI

**8K Miles Media Group, Inc., USA**



# சொர்க்கத்தில் யாருக்கு இடம்?

**''காசி மன்னரது நாட்டின் எல்லைப் பகுதியில் வாழ்ந்து வந்த வேடன் ஒருவன், கடுமையான விஷம் தோய்ந்த அம்பை எடுத்துக் கொண்டு காட்டில் மான் வேட்டைக்கு சென்றான். ஓரிடத்தில் ஏராளமான மான்களைக் கண்டு, துரத்திக் கொண்டு போய் அம்பைத் தொடுத்தான். அந்த அம்பு குறி தவறி பெரிய மரம் ஒன்றில் குத்தி நின்றது.**

ஒரு சில விநாடிகளில் அம்பில் இருந்த கடுமையான விஷம் மரம் முழுவதும் பரவியது. மரத்தில் இருந்த காய்களும் இலைகளும் கனிகளும் உதிர்ந்து கீழே விழுந்தன. மரம் காய்ந்து போனது.

அந்த மரத்தின் பொந்தில் நீண்ட காலமாக வசித்து வந்த கிளி ஒன்று, மரத்தின் மீதுள்ள பற்றினால், அங்கிருந்து வெளியேறவில்லை. தர்மத்தில் பற்றுள்ள அந்தக் கிளி, வெளியே போய் இரை தேடவில்லை. பட்டுப் போன அந்த மரத்துடன் சேர்ந்து தானும் காய்ந்தது.

அதைக் கண்ட தேவேந்திரன் வியப்பு அடைந்தார். ''மனிதர்களை விட இந்தக் கிளி, நடத்தையில் உயர்ந்ததாக இருக்கிறது. மரத்துடன் சேர்ந்து, தானும் துயரத்தை அனுபவிக்கிறது. என்ன கருணை, என்ன கருணை! ஆனால், ஒன்று; குணமும் குற்றமும் எல்லா ஜீவராசிகளிடமும் இருக்கத்தான் செய்கிறது!'' என்று பாராட்டினார்.

உடனே தேவேந்திரன் ஒரு மானிட வடிவம் எடுத்து, கிளியை நெருங்கிக் கேட்டார். ''கிளியே! உனது நற்குணத்தைப் போற்றுகிறேன். என் கேள்விக்கு பதில் சொல்! பட்டுப் போன இந்த மரத்திலேயே நீ ஏன் இன்னும் தங்கி இருக்கிறாய்? வேறு ஏதாவது காய் கனிகளுடன் கூடிய மரமாக பார்த்து போகக் கூடாதா?''

அவரை தலையால் வணங்கி நமஸ்கரித்த கிளி, ''தேவர்களின் தலைவனே! நீ தேவேந்திரன் என்பதை என் தவத்தின் மூலமாகத் தெரிந்து கொண்டேன்!'' என்றது.

''கிளியே! இந்தக் காட்டில் பச்சைப் பசேலென்று எவ்வளவோ மரங்கள் இருக்கின்றனவே! காய்ந்து கிடக்கும் இந்த மரத்தை ஏன் காவல் காக்கிறாய்? பட்டுப் போன இந்த மரத்தை விட்டுவிடு!'' என்றார்.

கிளி பெருமூச்சு விட்டுத் துயரத்துடன் பேசத் தொடங்கியது: ''தேவேந்திரா! அநேக நற்குணங்கள் பொருந்திய இந்த மரத்தில்தான் நான் பிறந்தேன். இந்த மரம்தான் இது வரை என்னைக் கட்டிக் காத்தது. பகைவர்களிடம் இருந்து என்னைக் காத்ததும் இதே மரம்தான்.

இப்படி நெடுங்காலமாக என்னை காக்கும் இந்த மரத்தை, விட்டு விடும்படி நீ சொல்லலாமா? அன்பும் இரக்கமும் நன்றியும் கொண்ட நான், இந்த மரத்தை விட்டுப் போகலாமா? நல்ல நிலையில் இருந்தபோது இங்கிருந்து எல்லா சுகங்களையும் அனுபவித்து விட்டு, நிலைமை மாறி கெட்ட நிலை வந்தவுடன் இந்த இடத்தை விட்டுப் போவது எந்த விதத்தில் நியாயம்.

தர்ம விஷயங்களில் எல்லா தேவர்களும் உன்னிடம் வந்து தெளிவு பெறுகிறார்கள். அப்படிப்பட்ட நீ, என்னை நன்றி மறக்கச் சொல்லலாமா?'' என்றது.

தேவேந்திரன் உள்ளம் விம்மினார். ''கிளியே! நன்றி மறவாத உனது செய்கை எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது. சரி.. உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்!'' என்றார்.

''இந்த மரம் பழையபடி தழைத்துக் குலுங்க வேண்டும்!'' என்று கேட்டது கிளி.

தேவேந்திரன் உடனே அந்த மரத்தின் மீது அமிர்தத்தைப் பொழிந்தான். கண்மூடித் திறப்பதற்குள் பழையபடி தழையும், பூவும், கனிகளுமாக மரம் செழித்து விளங்கியது. அங்கேயே தொடர்ந்து வசித்த கிளி, தனது ஆயுட்காலம் முடிந்ததும், இந்திரலோகத்தை அடைந்தது.

தங்களுக்கு உயிர் கொடுத்து, கஷ்டப்பட்டு வளர்த்த பெற்றோரை, அவர்களுக்கு வயதானவுடன் புறக்கணிக்கும் மனிதர்களுக்கு மத்தியில், நன்றாக இருந்தபோது தனக்கு வாழ இடம் கொடுத்த மரம், பட்டுப்போனாலும், நன்றி மறக்காமல், அந்த மரத்தை விட்டு நீங்க மனம் இல்லாமல் அங்கேயே இருந்ததால், அந்த கிளிக்கு சொர்க்கத்தில் இடம் கிடைத்தது.



# ஏலியன் பிரேதப் பரிசோதனை


ஹரி

ரே சாண்ட்லி...

ஒரு மனிதனின் உயர்வும் தாழ்வும் என்றுமே நிலையானவையல்ல என்பதற்குச் சிறந்த உதாரணம். அதுவும் ஒரே நாளில் புகழின் உச்சிக்குப் போனவர்கள் எப்போது வேண்டுமானாலும் கீழே வரத் தயாராக இருக்க வேண்டும் என்பதற்கு அடையாளம் தான் ரே சாண்ட்லி. சுருக்கமாக ரே.

## யார் இந்த ரே சாண்ட்லி?

1995ஆம் ஆண்டு.

வேற்றுக்கிரக மனிதர்கள் (?) பற்றிய ஆராய்ச்சி உச்சத்தில் இருந்த நேரம். உலக நாடுகள் போட்டிப் போட்டுக்கொண்டு வேற்றுக்கிரக உயிரினங்களைப் பற்றிய ஆராய்ச்சிக்காகப் பணத்தைக் கொட்டிக் கொடுத்தன. விண்வெளி ஆராய்ச்சியாளர்கள் தங்கள் முழு நேரத்தையும் வேற்றுக் கிரகங்களைப் பற்றியும், அவற்றில் வாழ்வதாகக் கூறப்படும் உயிரினங்களைப் பற்றியும் தெரிந்துகொள்ள மும்முரமாக ஈடுபட்டு வந்தனர்.

முக்கியமாக, வல்லரசு நாடுகளான அமெரிக்காவும், ரஷ்யாவும் இதில் ஒரு மௌன யுத்தமே நடத்தின.

இதற்குக் காரணம் இருந்தது. அந்தக் காரணத்தைப் பிறகு சொல்கிறேன். இப்போது ரே சாண்ட்லி மேட்டருக்கு வருவோம்.

1995ஆம் ஆண்டு லண்டனில் உள்ள எல்லாப் பத்திரிகைகளுக்கும் ரே சாண்ட்லி என்பவரிடம் இருந்து ஒரு தகவல் வந்தது. இந்த தேதியில், இத்தனை மணிக்கு, இந்த ஓட்டலில் பத்திரிகையாளர்களைச் சந்திக்க இருப்பதாகவும், விஷயம் ரொம்பவும் முக்கியமானது மட்டுமல்ல, அதிசயமானதும் கூட என்று அந்தத் தகவலில் சொல்லப்பட்டிருந்தது.

இதுபோல நிறைய டுபாக்கூர் அழைப்புகளைக் கண்டிருந்த பத்திரிகையாளர்கள், அந்த அழைப்பைக் கண்டுகொள்ளாமல் விட்டு விட்டனர். ‘மனிதர் ரொம்ப முக்கியம், ரகசியம் என்கிறாரே, போய்தான் பார்ப்போமே’ என்று, எந்த முக்கிய அசைன்மென்ட்டும் இல்லாத சில நாளிதழ்கள் மற்றும் டி.வி. நிருபர்களும், கேமரா மேன்களும் அந்தப் பத்திரிகையாளர் சந்திப்பில் கலந்து கொண்டனர்.

வந்திருந்தவர்களை ரொம்பவும் ஆர்ப்பாட்டமாக வரவேற்ற ரே, ஒரு டாக்குமென்ட்ரி படத்தைப் போட்டுக் காட்டினார். அந்தப் படம் ஓடத் தொடங்கியதுமே சுவாரசியமில்லாமல் நாற்காலியில் இருந்த பத்திரிகையாளர்கள் நிமிர்ந்து உட்கார்ந்தனர்.

படம் ஓட ஓட அத்தனை பேர் கண்களிலும் பிரகாசம்; பரபரப்பு; பதற்றம். அவ்வளவுதான். அடுத்த சில நிமிடங்களில் பத்திரிகை, சேனல் அலுவலகங்களுக்கு போன்கள் பறந்தன. தீப்பற்றிக் கொண்டதைப் போல அங்கும் அந்தப் பரபரப்புத் தொற்றிக் கொண்டது.

அத்தனை பரபரப்புக்கும் காரணம் அந்த டாக்குமென்ட்ரி. உலகத்தையே கலக்கிய டாக்குமென்ட்ரி அது. ஒரே நாளில் புகழின்


Leased Wire Associated Press

Roswell Daily Record

RECORD PHONES Business Office 2288 News Department 2287

Movies as Usual

Claims Army Is Stacking Courts Martial

RAAF Captures Flying Saucer On Ranch in Roswell Region

House Passes Tax Slash by Large Margin

Security Council Paves Way to Talks On Arms Reductions

No Details of Flying Disk Are Revealed

Ex-King Carol Weds Mme. Lupescu

Some of Soviet Satellites May Attend Paris Meeting

Roswellians Have Differing Opinions On Flying Saucers

American League Wins All-Star Game

Miners and Operators Sign Highest Wage Pact in History

1947: HEADLINES Alien Spacecraft Crashes at Roswell, New Mexico

உச்சிக்குப் போய்விட்டார் ரே. அப்படி என்ன அந்த டாக்குமெண்ட்ரி படத்தில் இருக்கிறது என்கிறீர்களா?

17 நிமிடங்கள் ஓடிய கறுப்பு வெள்ளை டாக்குமென்ட்ரி அது. 1947ஆம் ஆண்டு ஜூன் 2ஆம் தேதி நியூ மெக்ஸிகோவில் ரோஸ்வெல் என்னும் இடத்தில் உடைந்து விழுந்த, பறக்கும் தட்டில் இருந்து கிடைத்த சில ஏலியன்களின் போஸ்ட்மார்ட்ட காட்சிகள் தான், அந்த டாக்குமென்ட்ரியில் இருந்தன.

ரே சாண்ட்லி சொன்னபடி, ரோஸ்வெல் என்ற இடத்தில் பறக்கும் தட்டு உடைந்து விழுந்த சம்பவம், இந்த உலகமே அறிந்தது என்பதால், அவர் சொன்னதில் ஆராய்ச்சியாளர்களுக்குக் கொஞ்சம் கூடச் சந்தேகமே எழவில்லை.

உலகமே 'ரே' வைத்தூக்கி வைத்துக் கொண்டாடியது. அவருடன் ஒரு வார்த்தை பேசவும், ஆட்டோகிராப் வாங்கவும் இளவட்டங்கள் முண்டியடித்தனர். அவருக்கு கட்அவுட் வைத்துப் பால் அபிஷேகம் செய்யாதது தான் பாக்கி.

பிரபுக்களும், கோடீஸ்வரர்களும் அவரை விருந்துக்கு அழைத்துத் தங்களைப் பெருமைப்படுத்திக் கொள்ள நினைத்தனர்.

வேற்றுக்கிரகங்களைப் பற்றி ஆராய்பவர்கள் அவரை மொய்த்துக்கொண்டு, கேள்வி மேல் கேள்வி கேட்டு அவரைத் திணறடித்துக் கொண்டிருந்தார்கள்.

இந்த டாக்குமென்ட்ரி எங்குக் கிடைத்தது, எப்போது கிடைத்தது, யார் மூலம் கிடைத்தது, இத்தனை காலம் அந்த டாக்குமென்ட்ரி எங்கே இருந்தது என அவர்களின் எல்லாக் கேள்விகளுக்கும் புன்னகையுடன் பதில் சொல்லிக் கொண்டிருந்தார் ரே.

பல நாடுகள், தங்கள் நாட்டு ஆராய்ச்சியாளர்களின் கூட்டத்தில் அந்த டாக்குமென்ட்ரியைப் போட்டுக் காட்ட அழைப்புகளை விடுத்தன. இப்படியே கிட்டத்தட்ட 30 நாடுகளுக்கு மேல் பயணம் செய்து எல்லோருக்கும் அந்த டாக்குமென்ட்ரியைப் போட்டுக் காட்டினார் ரே சாண்ட்லி.

ஒவ்வொரு நாட்டிலும் 'ரே'வுக்கு ராஜ மரியாதைதான்.

வேற்றுக்கிரக உயிரினங்களைப் பற்றிய ஆராய்ச்சியில் உலக நாடுகள் தீவிரமாக இருந்த



நேரத்தில், ரே சாண்ட்லி வெளியிட்ட 'ஏலியன்களின் பிரேதப் பரிசோதனை' டாக்குமென்ட்ரி, ஆராய்ச்சியாளர்களின் மத்தியில் எந்த மாதிரியான தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கும் என்பது உங்களுக்குப் புரிந்திருக்கும்.

அதனால் தான் 'ரே'வுக்கு இத்தனை மாலை மரியாதைகளும் பாராட்டுகளும்.

வேற்றுக்கிரக உயிரினங்களைப் பற்றிய விஷயத்தில் உலக நாடுகள் அதிக அக்கறை செலுத்துவதைப் பற்றிப் பிறகு சொல்கிறேன் என்று சொல்லியிருந்தேன். இப்போது சொல்கிறேன். கொஞ்சம் நிமிர்ந்து உட்கார்ந்து கவனமாகக் கேளுங்கள்.

** ** **

பூமியைத் தவிர்த்து வேற்றுக் கிரகங்களிலும் உயிரினங்கள் இருக்கின்றன என்ற கருத்து, பண்டைக்கால மனிதர்களில் தொடங்கி, நவீன விஞ்ஞானிகள் வரை இருக்கிறது.

ஆதிகாலத்து அறிவுஜீவிகள் மாயன்களின் தெய்வங்கள், வேற்றுக்கிரகத்தைச் சேர்ந்தவர்களைப் போலத் தோற்றம் கொண்டவர்கள் என்று வரலாறு சொல்கிறது.

கிரேக்கர்கள் காலத்தில் கூட, வானில் வித்தியாசமான, வட்ட வடிவமான உலோகப் பறவையொன்று பறந்து சென்றதாகவும் குறிப்புகளை எழுதி வைத்திருக்கிறார்கள்.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே பறக்கும் தட்டுகளைப் பற்றியும், ஏலியன்களைப் பற்றியும் பேசி வந்திருக்கிறார்கள்.

1600களில் இத்தாலி நாட்டின் ரோம் நகரில், கியோர்டனோ ப்ருனோ என்கிற கிறிஸ்தவப் பாதிரியார், ''விண்வெளியில் நம்முடைய பூமியைப் போலப் பல கிரகங்கள் இருக்கலாம். அவற்றில் மனிதர்களைப் போலவோ, நம்மை விட அறிவில் உயர்ந்த வேறு உயிரினங்கள் வாழச் சாத்தியங்கள் உள்ளன'' என்று கூறினார்.

கடவுளுக்கும் மதத்துக்கும் எதிராகப் பேசுகிறார் என்று சொல்லி மதவாதிகள் அவரை உயிரோடு எரித்துக் கொன்றனர்.







19ஆம் நூற்றாண்டில் ஜூல்ஸ் வெர்ன், ஏ.ஏ.வெல்ஸ் போன்ற பிரபல நாவலாசிரியர்கள், வேற்றுக்கிரக உயிரினங்களை மையமாகக்கொண்டு பல நாவல்களை எழுதி, ஏலியன்களைப் பற்றிய ஆர்வத்தைத் தூண்டி விட்டனர்.

1900ஆம் ஆண்டில் பிரெஞ்சு நாட்டு அமைப்பு ஒன்று, வேற்றுக்கிரகவாசிகளுடன் தொடர்பு கொள்பவருக்குக் கோடிக்கணக்கில் பணம் தருவதாக அறிவித்தார்கள். ஏலியன்களோடு தொடர்பு கொண்டதை எப்படித் தெரிவிப்பார் என்பது அவர்களுக்கே வெளிச்சம்.

''இந்தப் பிரபஞ்சத்தில் வேறு உயிரினங்களும் இருக்கும்'' என்று பிரபல விஞ்ஞானியான ஸ்டீவன் ஹாகிங்கும் சொல்லியிருக்கிறார்.

இன்று படித்த ஸ்டீபன் ஹாகிங் கூற்றுப்படிப் பிரபஞ்சத்தில் பூமியில் மட்டுமல்லாது, மற்ற இடங்களிலும் உயிரினங்கள் இருக்க நிறையச் சாத்தியக்கூறுகள் உள்ளனவாம்! ஆகவே, நம் ஞாபகங்களைக் கொஞ்சம் அலசியும், புதிய விஷயங்களைச் சேர்த்தும் இந்த மீள்பதிவு மேற்கொள்ளப்படுகிறது!

அறிவியல்பூர்வமாக நிரூபிக்காத வரையில் எதுவும் உண்மை இல்லையென்று சர்வதேச விஞ்ஞானிகள் வெளித்தோற்றத்துக்கு ஒதுங்கிக் கொண்டாலும், வேற்றுக்கிரக மனிதர்களைப் பற்றிய சந்தேக ஆராய்ச்சி மட்டும் நிற்கவில்லை.

கண்ணுக்குத் தெரியாத சிறு பூமி என்னும் கோளில் மனிதன் வாழும்போது, இந்தப் பிரபஞ்சத்தில் நம்மைப் போல் அல்லது நம்மை விட அதிகமான அறிவைக்கொண்ட ஏலியன்கள் வாழ்வது சாத்தியமே என்பது பலரின் வாதம்.

கடந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வேற்றுக்கிரக உயிரினங்கள் இருக்கின்றன, இல்லை என்ற விவாதங்கள் இறக்கை கட்டிப் பறந்தன. இப்போதும் பறந்து கொண்டிருக்கின்றன. அந்தக் காலக்கட்டத்தில் இந்த வாதங்கள் அதிகமாக இருந்தன.

அதற்கேற்றவாறு வானில் நள்ளிரவில் பறந்து சென்ற அதிசயப் பொருள்களைப் பற்றி அடிக்கடி தகவல்கள் வந்து கொண்டுதான் இருந்தன.




விஞ்ஞானிகளில் ஒரு சிலரோ, ''அவை பறக்கும் தட்டுகள் இல்லை. செயலிழந்த விண்கலன்களாகவோ, ஏதேனும் எரி நட்சத்திரமாகவோ, விண்கற்களாகவோ இருக்கும். அவை கீழ் நோக்கி வரும்போது பூமியின் ஆகர்ஷண சக்தியால் ஈர்க்கப்பட்டு அவ்வாறு தோற்றம் தரக்கூடும்.'' என்று கூறினர்.

'ஏலியன்' என அழைக்கப்படும் வேற்றுக்கிரகவாசிகள் பூமிக்கு வந்து நடமாடும் தகவல்கள், 1930-40களில் அதிகரித்தன. நிறையப் பேர் பறக்கும் தட்டைப் பார்த்தேன், ஏலியன்களைப் பார்த்தேன் என்று சொல்லிப் பரபரப்பை ஏற்படுத்தினார்கள்.

ரே சாண்ட்லியைப் பற்றிச் சொல்வதாகச் சொல்லிவிட்டுப் பறக்கும் தட்டுகளையும் ஏலியன்களையும் பற்றி லெக்சர் அடிக்கிறீர்களே என்று கேட்பவர்களுக்கு மட்டும் ஒரு விஷயத்தைச் சொல்கிறேன்.

இந்த விவகாரங்களில் சம்பந்தப்பட்ட சில 'முன்னோட்ட' விஷயங்களைத் தெரிந்து கொண்டால்தான், ரே சாண்ட்லியையும், அவரின் 'ஏலியன் பிரேதப் பரிசோதனை' டாக்குமென்ட்ரியைப் பற்றியும் புரிந்துகொள்ள முடியும்.

ரே சாண்ட்லி உலகப்புகழ் பெறக் காரணமான டாக்குமென்ட்ரியில், 1947ஆம் ஆண்டு ஜூன் 2ஆம் தேதி நியூ மெக்ஸிகோவில் ரோஸ்வெல் என்னும் இடத்தில் உடைந்து விழுந்த பறக்கும் தட்டில் இருந்து கிடைத்த, சில ஏலியன்களின் போஸ்ட்மார்ட்டக் காட்சிகள் இருந்தன என்று சொல்லியிருந்தேன் அல்லவா?

அந்தப் பறக்கும் தட்டும், ஏலியன்களும் பூமிக்கு வந்த கதையையும், அதன் பின்னணியில் நடந்த மர்மங்களையும், இன்னமும் அவிழாத சில மர்ம முடிச்சுகளையும் விலாவாரியாகச் சொல்கிறேன்.



**N**ominations are invited from Heads of Research Institutions, Universities and Medical & Pharmaceutical Colleges for **Sun Pharma Research Awards-2018 & Sun Pharma Science Scholar Awards-2018.**




**INVITATION FOR NOMINATIONS**

**SUN PHARMA RESEARCH AWARDS & SUN PHARMA SCIENCE SCHOLAR AWARDS**

**The Sun Pharma Research Awards** are for excellence in original research in Medical and Pharmaceutical Sciences. There are three Awards of Rs.2,50,000 (Rupees two lakh fifty thousand) each; two in Medical Sciences – (Basic Research, and Clinical Research), and one award in Pharmaceutical Science. The sponsored work of Indian Scientists, both in India and abroad, together with their bio-data, photograph, research achievements, awards received in the past and papers published, along with justification for nomination and citation on the research work by the nominator, may be submitted.

**Sun Pharma Science Scholar Awards:** There are four awards - two each in Bio-Medical Sciences and Pharmaceutical Sciences for Rs.50,000/- each, and an additional amount of Rs.50,000/- to attend international conference. Indian nationals under the age of thirty (as on August 30, 2018), who have completed at least 1$^{st}$ year of MD or PhD in Biomedical or Pharmaceutical Sciences are eligible to apply. Those who have completed their MD, or PhD and above the age of thirty, as on date August 30, 2018 are not eligible to apply. The applicant should have completed a Research Project and should be willing to present his/her research work in front of knowledgeable assessors.

The nominations can be submitted online through Sun Pharma Science Foundation's website www.sunpharmasciencefoundation.net from **July 1, 2018 to August 30, 2018.** The applicants may also require to send a print copy of the nomination, with all attachments, to the office of the Foundation by **September 10, 2018.** Detailed nomination Procedure is available on Foundation's website.

For further information, please contact :

The Office of Sun Pharma Science Foundation
Sarhaul, Sector-18, Gurgaon-122015, Haryana (India); Tel.(91-124) 2341477; 4194342
E-mail : sunpharma.sciencefoundation@sunpharma.com

Website : http://www.sunpharmasciencefoundation.net

1947ஆம் ஆண்டு ஜூன் 2ஆம் தேதி.

அமெரிக்காவின் நியூ மெக்சிகோ மாநிலத்தில் ராஸ்வெல் என்ற ஊரைச் சேர்ந்த மாக் ப்ரேஸல் என்ற பண்ணையார், தன் வீட்டின் மாடியில் இருந்து கண்ணுக்கெட்டிய தூரம் வரை இருந்த தன் பண்ணையைப் பெருமையுடன் பார்த்துக் கொண்டிருந்தார்.

எட்டாயிரம் ஹெக்டர் பண்ணைக்குச் சொந்தக்காரர் என்றால் பெருமை இருக்காதா என்ன?

கடந்த இரண்டு நாட்களாக அந்தப் பகுதியைப் புயல் தாக்கி இருப்பதால், கனமழை பெய்து கொண்டிருந்தது. மாலை நேரத்திலேயே மின்னலும், இடியும் வானில் ஜாலவித்தையைக் காட்டிக் கொண்டிருந்தன.

கொஞ்ச நேரம் அங்கேயே நின்று கொண்டிருந்த பண்ணையார், இருட்டத் தொடங்கியதும், மாடியில் இருந்து இறங்கி வீட்டுக்குள் நுழைந்தார். கொஞ்ச நேரத்தில் குறட்டை விட்டுத் தூங்கத் தொடங்கி விட்டார்.

நடுராத்திரியில் திடீரென்று பெருத்த வெடிச்சத்தத்தைக் கேட்டு அலறியடித்து எழுந்த மாக், மாடிக்கு வேகமாகச் சென்று பார்த்தபோது, வானம் பொத்துக்கொண்டு கொட்டியதில் கண்ணுக்கெட்டிய தூரம் வரை எதுவும் தெரியவில்லை.

விடிந்ததும் முதல்வேலையாக, நடுராத்திரியில் என்ன நடந்தது என்பதை அறியத் தன் பிரியமான குதிரையின் மீதேறிச் சப்தம் வந்த திசையை நோக்கிக் குதிரையை விரட்டினார்.

அவர் வீட்டிலிருந்து இரண்டுமணிநேரப் பயணத்தில், வித்தியாசமான விமானம் மாதிரியான ஊர்தியொன்று துண்டு துண்டாக உடைந்த நிலையில் விழுந்து கிடந்தது. வானிலை ஆராய்ச்சிக்காகப் பறக்க விடப்படும் பலூன்கள் அவரின் பண்ணையில் பலமுறை விழுந்துள்ளன. ஆனால், இந்த ஊர்தியைப் போல அவை இல்லை. நிறைய வித்தியாசங்கள் இருந்தன.

அது எந்த உலோகத்தால் செய்யப்பட்டது என்பதை





அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை.

என்ன செய்வதென்று யோசித்த மாக், அங்கே விழுந்து கிடந்த எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு, தன் நண்பரும், பக்கத்துப் பண்ணைக்கு உரிமையாளருமான லொரெட்டா ப்ராக்டர் என்பவரின் வீட்டுக்குப் போனார்.

''என்னப்பா. பார்த்து ரொம்ப நாளாச்சி. பக்கத்துலதான் இருக்கே. ஆனா வரவே மாட்டேங்கிற...''

''இந்தப் பண்ணையாள்கள கட்டி மேய்க்கவே சரியா இருக்கு. இப்ப நான் வந்த விஷயமே வேற.'' என்று சொன்ன மாக், தான் கொண்டு வந்த பொருட்களை அவர் முன் வைத்து, நடந்த விஷயங்களைச் சொன்னார். லொரெட்டாவால் அதை என்னவென்று கண்டுபிடிக்க முடியவில்லை.

கொஞ்ச நேரம் யோசித்த அவர், ''எனக்கென்னவோ இது வேற மாதிரியான சங்கதியா இருக்குமோன்னு தோணுது. உனக்கு ஞாபகம் இருக்கா?... கொஞ்ச நாளைக்கு முன்ன, கென்னெத் ஆர்னால்ட்ங்கிற தொழிலதிபர் பறக்கும் தட்டைப் பார்த்ததா சொன்னாரே? பேப்பர்ல கூட வந்துச்சே? அதுமாதிரி ஏதாவது இருக்குமோ?...''

''பறக்கும் தட்டா?... அந்த விஷயம் எனக்குத் தெரியாதே?...''

''கொஞ்சநாளைக்கு முன்னாடி, அந்தத் தொழிலதிபர் தன்னோட விமானத்துல வாஷிங்டன்கிட்ட பறந்துக்கிட்டு இருக்கும்போது, நல்லா ரொம்ப வெளிச்சமா ஒன்பது தட்டுகள் மாதிரியான ஊர்திகள் பறந்ததைப் பார்த்திருக்கிறார். அவை கிட்டத்தட்ட விமானத்த விட நாலு மடங்கு வேகமா பறந்ததையும் பார்த்தாராம்.

அத அவருக்குத் தெரிஞ்ச பத்திரிகைக்காரங்ககிட்ட சொல்லப்போக, அவங்க பெரிய செய்தியா போட்டுடாங்க! இதப் படிச்ச நிறையப் பேரு, நாங்களும் பறக்கும் தட்டைப் பார்த்தோம்ன்னு சொல்ல ஆரம்பிச்சிட்டாங்க.

**தொடரும்**

# கல்வி பணிக்காக ஒரு நடைப்பயணம் பாஸ்டன் தமிழ் மக்களின் உதவிக்கரம்



“எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே, ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே!” என்ற முழக்கத்துடன், தந்தையர் தினமான ஜூன் 17, 2018, ஞாயிற்றுக்கிழமை அன்று தமிழ்நாடு அறக்கட்டளையின் பாஸ்டன் அத்தியாயத்தின் உறுப்பினர்களும், புரவலர்களும் ஒரு நடைபயணம் மேற்கொண்டனர்.

நியூ ஹாம்ப்ஷயர் மாநிலத்தில், நாஷுவா நகரில் நடந்த இந்த நடை பயணத்தில், ஏறத்தாழ நூறு பேர் பங்கேற்றனர். இந்த நடைபயணம், பாஸ்டன் அத்தியாயத்தின் முதல் பொது நிகழ்ச்சியாகும். இந்நிகழ்ச்சியில், அத்தியாயத்தின் தலைவர் லட்சுமி முணுகூர் மற்றும், அறக்கட்டளையின் தேசிய செயலாளர் சாத்தப்பன் முத்தையா ஆகியோர் அறக்கட்டளையின் பல்வேறு சாதனைகளையும், ஆக்கப்பணிகளையும் எடுத்துரைத்தனர்.

44 ஆண்டுகளாக இயங்கி வரும் இந்த அமைப்பு, தமிழகத்தின் இருபதுக்கும் மேற்பட்ட மாவட்டங்களில் இயற்றிவரும் கல்விப்பணிகள் , ஊரக மேம்பாட்டுப் பணிகள், மகளிர் மேம்பாட்டுப் பணிகள், சுகாதாரம் மற்றும் மருத்துவ மேம்பாட்டுப் பணிகள் குறித்து அனைவருக்கும் விளக்கப்பட்டது.

குறிப்பாக, பாஸ்டன் அத்தியாயத்தின் சார்பில் திருவாரூர் மாவட்டத்தில், நெடும்பலம் கிராமத்தின் அரசுப் பள்ளியில், 95 ஏழை மாணவர்களின் கல்வி மேம்பாட்டுக்கு, தமிழ்நாடு அறக்கட்டளையின் “ABC Project” திட்டத்தின் மூலம் ஆற்றப்பட்டு வரும் பணிகள் குறித்து விளக்கப்பட்டது. கூடியிருந்த அன்பர்களின் ஏகோபித்த ஆதரவுடன், “ABC Project” கல்விப்பணி விரிவாக்கத்துக்காக, $10,000க்கும் மேல் நிதி திரட்டப்பட்டது.

தம் தாயகத்தின் ஏழை மாணவர்களின் கல்விக்கு உதவிக்கரம் கொடுத்த நிறை உணர்வுடன், அன்பர்கள் நடைபயணம் மேற்கொண்டனர்.

இந்நிகழ்ச்சிக்கு, தமிழ் மக்கள் மன்றம், நியூ இங்கிலாந்து தமிழ் சங்கம், ரோட் ஐலாந்து தமிழ் சங்கம் மற்றும் பாரதி வித்யாஷ்ரமம் அமைப்புகள் பேராதரவு கொடுத்தன.

தமிழ்நாடு அறக்கட்டளையின் பாஸ்டன் பகுதி அத்தியாயத்தின் தொடர்பு முகவரிகள்: boston@tnfusa.org, <http://boston.tnfusa.org>, <https://www.facebook.com/Tamil-Nadu-Foundation-Greater-Boston-Chapter-156293845198339/>

# உற்சாகத்துடன் கொண்டாடப்பட்ட வளைகுடாப் பகுதி தமிழ் மன்றத்தின் மகளிர் மட்டும் நிகழ்ச்சி



**வ**ளைகுடாப் பகுதி தமிழ் மன்றம், முதன் முதலாக பெண்களுக்கான சிறப்பு நிகழ்ச்சி ஒன்றை ஏற்பாடு செய்தது. ஃபிரீமாண்ட் நகரில் உள்ள இர்விங்டன் சமுதாய கூடத்தில், கடந்த ஜூன் 3ம் தேதி மாலை 4 மணியளவில் "மகளிர் மட்டும்" நிகழ்ச்சி சிறப்பாக தொடங்கியது.

இதில், வளைகுடாப் பகுதியில் வாழும் பெண்கள் பெருந்திரளாகக் கலந்து கொண்டனர். புதுமையான நிகழ்வு என்பதால், நிறையப் புதிய பெண் உறுப்பினர்கள் கலந்து கொண்டனர்.

பெண்கள் மட்டும் பங்கு பெற்ற நடனம், சிறப்புப் பாடல், ஆடை அணிவகுப்பு, பாட்டுக்கு பாட்டு மற்றும் இசை நாற்காலி உள்பட பல்வேறு நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இந்தப் நிகழ்ச்சிகளில் பெண்கள் மிகுந்த உற்சாகத்துடன் கலந்து கொண்டனர்.

சமீபத்தில் கனடாவில் நடைபெற்ற உலக இளையோர் டேபிள் டென்னிஸ் போட்டியில், அமெரிக்க அணிக்காக விளையாடி, தங்கம் வென்ற, செல்வி.லாவண்யா மருதபாண்டியனுக்கு, பெண்கள் விழாக் குழுவினர், பொன்னாடை மற்றும் பூங்கொத்து கொடுத்து கவுரவப்படுத்தினர். நிகழ்ச்சியில் சிறப்பு விருந்தினராக கலந்து கொண்ட நடிகை பல்லவி, லாவண்யா மருதபாண்டியனுக்கு பாராட்டு தெரிவித்தார்.

மேலும், வட அமெரிக்க தமிழ் பேரவையின் (FeTNA) 31-வது ஆண்டு தமிழ் விழாவின் நிகழ்ச்சிகள் குறித்து, ஆதிரை பாஸ்கரன் (துணைத் தலைவர், Metro Plex தமிழ் சங்கம்) மற்றும் கெவின்மொழி (Cladwell Youth representative) இருவரும் விவரித்தார்கள்.

மேலும் விவரங்களுக்கு, https://www.bayareatamilmanram.org/ https://www.facebook.com/bayareatamilmanram/ என்ற இணையதளங்களைப் பார்க்கவும். ●

படித்ததில் பிடித்தது

## தோல்வி என்றால்...என்ன ?

**தோல்வி என்றால் நீங்கள் தோற்றவர் என்று பொருள் அல்ல. நீங்கள் இன்னும் வெற்றி பெறவில்லை என்று பொருள்.**

தோல்வி என்றால் நீங்கள் எதையுமே சாதிக்கவில்லை என்று பொருள் அல்ல. சில பாடங்களைக் கற்றுக்கொண்டு இருக்கின்றீர்கள் என்று பொருள்.

தோல்வி என்றால் நீங்கள் அவமானப்பட்டு விட்டதாக பொருள் இல்லை. முயன்று பார்க்கும் துணிவு உங்களிடம் உள்ளது என்று பொருள்.

தோல்வி என்றால் வாழ்க்கை வீணாகி விட்டதாகப் பொருள் அல்ல. மீண்டும் ஆரம்பிக்க ஒரு வாய்ப்புக் கிடைத்துள்ளது என்று பொருள்.

தோல்வி என்றால் விட்டு விட வேண்டும் என்று பொருள் அல்ல. இன்னும் செம்மையாக உழைக்க வேண்டும் என்று பொருள்.

தோல்வி என்றால் உங்களால் அடைய முடியாது என்று பொருள் அல்ல. அடைய கொஞ்சம் காலம் தாமதமாகலாம் என்று பொருள்.

தோல்வி என்றால் கடவுள் உங்களைக் கை விட்டு விட்டார் என்று பொருள் அல்ல. உங்களுக்கு வேறு நல்ல எதிர்காலத்தை நிர்ணயம் செய்து வைத்து இருக்கிறார் என்று பொருள்..

# இந்தியாவில் சேமிக்கலாம் வாங்க! 27





■ சேதுராமன் சாத்தப்பன்

## இரட்டை வரி விதிப்பு தடுப்பு ஒப்பந்தம் – தொடர்ச்சி

**இரட்டை வரி விதிப்பு தடுப்பு ஒப்பந்தம் பற்றி கடந்த இரண்டு இதழ்களாகப் பார்த்தோம். அதன் தொடர்ச்சியை இந்த இதழில் காண்போம்.**

ஏன் டி.டி.ஏ.ஏ., ஒப்பந்தங்கள் போடப்படுகின்றன என்றால் இரட்டை வரிவிதிப்பு தடுக்கப்படுவதால் அந்த நாடு முதலீடு செய்வதற்கு / வேலை செய்வதற்கு ஒரு நல்ல நாடாக கருதப்படுகிறது.

உதாரணத்திற்கு மொரிஷியஸ் நாட்டை எடுத்துக் கொள்ளலாம். அங்கு மிகவும் குறைவான வரி விகிதங்கள், பல நாடுகளுடன் இரட்டை வரி விதிப்பு, தடுப்பு ஒப்பந்தங்கள் ஆகியவை அந்த நாடை முதலீடு செய்வதற்கு ஒரு நல்ல நாடாக பல நாடுகள் கருதி முதலீடு செய்துள்ளன, கம்பெனிகளை ஆரம்பித்துள்ளன.



அதுபோல நாம் மொரிஷியஸ் நாட்டுடன் போட்டுள்ள ஒப்பந்தத்தின் படி முதலீட்டு ஆதாயங்களுக்கு வரி விதிப்பில் சலுகைகள் இருப்பதால், அங்கிருந்து இந்தியாவிற்கு வரும் முதலீடுகள் அதிகரித்துள்ளன. 2000ம் வருடத்தில் இருந்து 2015ம் வருடம் வரை 93பில்லியன் டாலர்கள் வந்துள்ளன. இது ஒரு நல்ல ஒரு பெரிய முதலீடு ஆகும். இது போல வெளிநாடு வாழ் போர்ட்போலியோ முதலீட்டாளர்களுக்கும் இந்த ஒப்பந்தம் நல்ல சலுகைகளை அளித்துள்ளது.

### என்.ஆர்.ஐ. கேள்வி பதில்

- வெளிநாட்டில் வசிக்கும் ஒரு என்.ஆர்.ஐ. எத்தனை சொத்துகள் இந்தியாவில் வாங்கலாம்?

**அன்பரசன்**
**நியூயார்க்**

- வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர், இந்தியாவில் எத்தனை வீடுகள் வேண்டுமானாலும் வாங்கலாம். ஆனால் அதை பின்னர் விற்று பணத்தை வெளிநாட்டிற்கு எடுத்துக் கொண்டு செல்ல வேண்டுமானால் இரண்டு வீடு மட்டும் தான் விற்று





எடுத்துச் செல்லலாம். அதுவும் எத்தனை வீடு வாங்க பணம் கொண்டு வந்தீர்களோ அதை மட்டும் தான் என்.ஆர்.ஐ. அக்கவுன்ட்டில் கிரெடிட் செய்ய முடியும் அல்லது வெளிநாட்டிற்கு எடுத்துச் செல்ல முடியும். முதலீட்டு லாபத்தை என்.ஆர்.ஓ., கணக்கில் போட்டு, வருடத்திற்கு ஒரு மில்லியன் டாலர் ரெமிட்டன்ஸ் கணக்கில் கொண்டு செல்லலாம்.

இரண்டு வீடுகளுக்கு அதிகமாக விற்கும் போது அதையும் என்.ஆர்.ஓ.கணக்கில் போட்டு வருடத்திற்கு ஒரு மில்லியன் டாலர் ரெமிட்டன்ஸ் கணக்கில் எடுத்துச் செல்லலாம்.

- **இது அமெரிக்காவில் இருந்து பணம் அனுப்ப நல்ல சமயமா?**

**கதிர்**
**வாஷிங்டன்**

- நல்ல கேள்வி. அமெரிக்க டாலருக்கு எதிராக ரூபாயின் மதிப்பு வலுவிழந்து வருகிறது. மேலும், இந்தியாவில் டெபாசிட்களுக்கான வட்டி விகிதங்கள் கூடி வருகின்றன. இது டபுள் போனன்ஸா என கூறலாம். ஆகவே பிக்ஸட் டெபாசிட்டில் போட விரும்புபவர்களுக்கு இது ஒரு சரியான சமயம் என கருதலாம். போடலாம்.

**அமெரிக்காவின் அட்லாண்டால் இருந்து அழைப்பு**

8K எக்ஸ்பிரஸில் இந்த தொடர் வர ஆரம்பித்த பிறகு பலர் தொலைபேசியில் கூப்பிட்டு அவர்களுக்கு தேவையான சந்தேகங்களை தெளிவுபடுத்தி வந்தார்கள். சமீபத்தில் ஒரு வித்தியாசமான நிகழ்வு நடந்தது. அட்லாண்டாவைச் சார்ந்த தமிழர் செந்தில் அழைத்து, இந்தியாவில் சொத்துக்கள் வாங்குவது, இருக்கும் சொத்தை விற்று பணத்தை வெளிநாட்டிற்கு கொண்டு செல்வது மற்றும் வெளிநாட்டிற்கு பணம் அனுப்புவது எப்படி என்று அங்கிருங்கும் தமிழர்கள் தெரிந்து கொள்ள வேண்டும், அதற்காக ஒரு கான்பிரன்ஸ் அழைப்பு வைக்கலாம் என்று யோசனை கூறினார். அதன்படி நடந்த தொலைபேசி கான்பிரன்ஸ் அழைப்பில் கலந்து கொண்டு சந்தேகங்களை போக்கிக் கொண்டார்கள்.

**உங்கள் சந்தேகங்களுக்கு**

உங்கள் சந்தேகங்களுக்கு எழுதுங்கள் sethuraman.sathappan@gmail.com மொபைல் 09820451259

# மக்களை சென்று அடையாத எந்தக் கலையும் வளர்ந்ததாக சரித்திரமே இல்லை

**- சிவக்குமார்**



சிவக்குமார் என்பவன் அடிப்படையிலேயே திரைப்படக் கலைஞன். 43 வருடம் திரைப்படத்திலும், சின்னத் திரையிலும், நாடகங்களிலும் நடித்தவன்.

7 ஆண்டுகள் ஓவியக் கலைகள் படைத்தவன். இந்தியாவில் காஷ்மீர் முதல் கன்னியாக் குமரி வரை சாலையோர சுவர்களில் ஓவியம் வரைந்தவன். இந்த கலைஞனை முழு நேர பேச்சாளனாக மாற்றிய பெருமை புத்தகத் திருவிழாவிற்கு உண்டு.

கோவை மாவட்டத்தில் ஒரு சின்ன கிராமம். நான் பிறந்த ஊர். காசிக் கவுண்டன் புதூர் என்று பெயர். சின்ன ஊர். இந்த ஊரிலே நான் பிறந்து 10 மாத குழந்தையாக இருக்கும்போது, எனது தந்தையார் இறந்து விட்டார். 4 வருடம் கழித்து என் அண்ணன் இறந்து விட்டார். பள்ளிக்கூடம் இல்லாத ஊர். மின்சாரம் கிடையாது. கழிப்பறை வசதி கிடையாது. குடிநீர் கிடையாது.

பிள்ளையார் கோவிலில் உள்ள பண்டாரம் தான் எங்களுக்கு அ-ன்னா. ஆ.வன்னா சொல்லிக் கொடுத்தார். தெருவில் உள்ள மண்ணை கையில் கொண்டு வந்து, அதை தரையில் பரப்பி, அதில் அ..ஆ..இ..ஈ என்று எழுதி கற்றுக்கொண்டோம். அந்த காலத்தில் சிலேட்டெல்லாம் வரவில்லை. அப்படித்தான் நான் படிக்க ஆரம்பித்தேன். பிறகு, ஒரு பள்ளிக்கு சென்று 4ம் வகுப்பு வரை படித்தேன். தனியார் பள்ளிக்கூடம்.

நீங்கள் எல்லாம் தமிழ்தாய் வாழ்த்து, கடவுள் வாழ்த்து கேள்விப்பட்டிருக்கிறீங்க. நாங்க படிச்ச வாழ்த்து, “வாழ்க.. வாழ்கவே.. மன்னர் வாழ்க.. ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் வாழ்கவே..” அதுதான் எங்களுக்கு இறை வணக்கம். நீங்கள் எல்லாம் ஒன்னாம் வாய்ப்பாடு, இரண்டாம் வாய்ப்பாடு,

மூணாம் வாய்ப்பாடு படிப்பீங்க. நான் அரை வாய்ப்பாடு, கால் வாய்ப்பாடு, முக்கால் வாய்ப்பாடு படித்தவன்.

4ம் வகுப்பு படிக்கும்போது, ஒரு கணக்குப் போடுவாங்க. கால், அரைக்கால் காசுக்கு 4ம் அரைக்கால் கத்திரிக்காய் ஒரு காசுக்கு எத்தனை கத்திரிக்காய்? வைடா கீழே அப்படின்னு வாத்தியார் சொல்றதுக்குள்ள கணக்குப்போட்டு வைத்திருக்கணும்.

வீட்டில் தாத்தா, பாட்டி இருந்தாங்கன்னா கேட்டுப்பாருங்க. 11 கத்திரிக்காய் கணக்கு. இன்றைக்கு நீங்கள் எல்லாரும் போடவே முடியாது. கால் அரைக்கால் காசுக்கு 4 அரைக்கால் கத்திரிக்காய், ஒரு காசுக்கு எத்தனை கத்திரிக்காய்.

கோயம்புத்தூர் போய் பி.ஏ. படிக்கலாம்ன்னு முடிவு பண்ணி காமர்ஸ், கணக்குப் பிரிவு எடுத்திருந்தேன். என் வாத்தியார் குமாரசாமி என்பவர் என்கிட்ட, வகுப்பில் நாலாவது, ஐந்தாவது ரேங்க்தான் வருவே. ஆனால், ஓவியத் துறையில் போனா பெரிய ஆளா வருவே. சென்னையில் ஓவிய கல்லூரி இருக்கிறது. அங்க போய் சேர்ந்துக்க"ன்னு சொல்லி, இந்து பேப்பரில் வந்த விளம்பரத்தை கட் பண்ணி கொடுத்தார்.

இது புதுவிதமான துறை. வெளியே அதிகம் பேருக்கு தெரியாது. போறதுன்னு முடிவு பண்ணும்போது, எங்க அம்மாவோட ஒன்றுவிட்ட மாமா, நான் உதவிப் பண்றேன். போய் படின்னு சொன்னாரு.

மெட்ராஸுக்கு போகும்போது, "மெட்ராஸ் ஒருமாதிரியா இருக்கும். பெண்களெல்லாம் கவர்ச்சியா இருப்பாங்க. அதனால மெட்ராஸ் போன பிறகு பீடி, சிகரெட் பிடிக்க கூடாது. தண்ணி அடிக்கக்கூடாது. பெண்கள் சகவாசம் இருக்கக்கூடாது. கூடாது"ன்னு காந்தி செய்து கொடுத்த சத்தியம் போல என் வாத்தியார் எங்கிட்ட சத்தியம் வாங்கினார். இந்த நாக்கில் காபி, டீ குடித்து 50 வருடம் ஆகிறது. இதற்கு எல்லாம் காரணம் என்



ஆசிரியர் குமாரசாமிதான்.

மெட்ராஸ் போனேன். பொள்ளாச்சி பக்கத்துல ஒரு ஊரில் சிவாஜி கணேசனின் நண்பர் ஒருவர் இருந்தார். அவர்தான் கூட்டிட்டு போனாரு. போன மறுநாளே தம்பி, சிவாஜியை பார்க்கிறியான்னு கேட்டாரு. எனக்கு பராசக்தி டையலாக் கண் முன்னே ஓடியது. நம்ம தலைவரை நாம பாக்கப் போறோமான்னு ஆசையா இருந்தது. போனவுடன் என்னை பார்த்தார். பேப்பரில் கையெழுத்துப் போட்டு கொடுத்தார்.

அன்னை க்கு ஒரு படம் ஷூட்டிங் போய் கொண்டி ருந்தது. எங்களு க்கு ஒரு சீனை திரையில் போட்டு காட்டினார். அது அசோகருடைய வரலாறு. அசோகர் கலிங்க நாட்டின் மீது போர்த்தொடுத்து, நிறைய அழிவை சந்தித்த பிறகு, "இது பெரிய தவறு. நல்ல வாழ்க்கை இல்லை என்று மனம் திருந்தி, புத்த மதத்தை சார்ந்தார் என்பது கதை.

முரசொலி மாறன் அதற்கு வசனம் எழுதியிருந்தார். சிவாஜி நடித்த நாடகத்தை நான் முதன் முதலில் திரையில் பார்த்தேன். அவங்க வீட்டில் பார்த்தேன். படம் பார்த்தவுடன் என்னை பார்த்து கேட்டார்.

"நடிக்க வறீங்களா, இல்லை பொம்மை படம் போடுறீங்களான்"னு. "ஐயா.. நான் பொம்மை படம் போடுறேன்ய்யா. நமக்கு இந்த வியாபாரம் எல்லாம் ஆகாது. இந்த கத்து கத்தி எவனால நடிக்க முடியும்? நமக்கு வேணாம் இந்த வேலை" அப்படின்னு சொன்னேன்.

பிறகு ஓவியக் கல்லூரியில்

சேர்ந்து படிக்கலாம்ன்னு சேரப் போனேன். அப்போ மாமா மாதாமாதம் 85 ரூபாய் பணம் அனுப்புவாரு. அம்மா வருட கடைசியில் அந்த கடனை அடைத்துவிடுவாங்க.

புதுப்பேட்டையில் ஒரு வீடு. 85 ரூபாய் மணி ஆர்டர் வரும். மணி ஆர்டர் கொண்டு வரும் தபால்காரனுக்கு 1 ரூபாய் கொடுத்து விடுவேன். மிச்சம் 84 ரூபாய். நேரா புகாரி ஓட்டலுக்குப் போவேன். அரை பிளேட் பிரியாணி 84 பைசா. 2 ஆம்லெட் 50 பைசா.

இதை சாப்பிட்டு நிறைய தண்ணீர் குடித்துவிட்டு ஒரு பட்ஜெட் போடுவேன். மிச்சம் எவ்வளவு இருக்கிறது என்று 82 ரூபாய். அதற்கு பட்ஜெட் போடுவேன். 15 ரூபாய் ரூம் வாடகை. 28 ரூபாய் கொடுத்து மதியம் சாப்பாடு, இரவு சாப்பாடு. 60 டிக்கெட் கொடுத்துடுவாங்க.

ஞாயிற்றுக்கிழமை இந்த பெண்கள் எல்லாரும் சர்ச்சுக்கு போவாங்க. காலையில் ஒரு தடவை. மாலையில் ஒரு தடவை. அந்த இடைவெளியில் துணியெல்லாம் துவைத்து விடுவேன். சினிமாவுக்கு பட்ஜெட் 3 ரூபாய். நேரா தியேட்டருக்குப் போவேன்.

அம்மா சொல்லி அனுப்பினாங்க. பெம்பளைங்க சகவாசம் வேண்டாம்ன்னு. எங்க வீட்டு வாசல்ல, பொண்ணுங்க, பசங்களெல்லாம் கேரம் போர்டு ஆடுவாங்க. நான் வீட்டு ஓட்டை வழியா பாப்பேன். அய்யோ. பசங்களெல்லாம் கேரம் போர்டு ஆடுறாங்களேன்னு. அய்யோ பஞ்சு, நெருப்பு பக்கத்துலயே இருக்கேன்னு. நான் பயந்துட்டே இருப்பேன்.

13 வயதில் இருந்து 19 வயது வரைக்கும் பசங்களுக்குள்ள ஒரு கனல் இருக்கும். ஒரு நெருப்பு. அறிவு ஜோதி எல்லாருக்குள்ளேயும் வரும். அந்த ஜோதியை பயன்படுத்தினால், நீங்கள் அப்துல்கலாம் ஆகலாம். ஐஸ்டின் ஆகலாம். விஞ்ஞானி ஆகலாம். தத்துவஞானி ஆகலாம். டாக்டர் ஆகலாம். என்னவேனாலும் ஆகலாம்.

இந்த பொறியை நீங்கள்



பயன்படுத்தி படிச்சிட்டீங்கன்னா வாழ்க்கையில் என்ன நினைக்கிறீங்களோ, அதுவா நீங்க ஆக முடியும். நீங்க முடிவு பண்ணிக்கங்க என்ன பண்ணலாம்ன்னு.

13 வயதில் இருந்து 19 வயதுக்குள்ள இந்த காதல் என்ற விஷயத்தில் மாட்டீன்னங்கனா தண்ணீருக்குள்ள இருக்க முதலைக்கிட்ட காலை விட்ட மாதிரி. வெளியே வர முடியுமா?. யாரும் வர முடியாது. நீங்க சாதிக்க வேண்டும் என்று நினைத்தீங்கன்னா, காதல் வலையில் விழாதீங்க.

அது என்னய்யா காதல். இனவிருத்திக்காக அடிப்படை உணர்வு. ஈ, கொசு, ஏன். மனநிலைமை பாதிக்கப்பட்டவன் கூட செக்ஸ் பண்ண முடியும்ன்னு சொல்றார் டாக்டர். அது பெரிய விஷயமே கிடையாது. அது எப்ப பண்ணனும்.

படிப்பு முடிந்து, டாக்டரோ, வக்கீலோ ஆகி, 24 வயதுக்கப்புறம் யாரைவேணும்னாலும் லவ் பண்ணுங்க. அப்பா, அம்மா மாட்டேன்னு சொல்லுவாங்க. சண்டை போட்டு பண்ணிக்கோங்க. அதை விட்டுவிட்டு டீன் ஏஜ்ல லவ்வுல இறங்கினீங்கன்னா வாழ்க்கையில் முன்னுக்கு வரவே முடியாது. இதை சொல்ல எல்லா தகுதியும் எனக்கு இருக்கிறது.

குழந்தைகளா, தயவுசெய்து ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். நான் காதலுக்கு எதிரி அல்ல. 13 வயதில் இருந்து 19 வயது வரைக்கும் காதலில் இறங்காதீங்க. லவ் 24 வயதுக்கு அப்புறம் பண்ணுங்க.

படிப்பு முடிந்து படம் வரைய ஆரம்பித்தேன். அப்பவே நான் ஊரில் இருக்கும்போது பிரமாதமாக படம் போடுவேன். 1960ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 26 ம் தேதி செஞ்சி கோட்டைக்கு போனேன். ராஜகிரி மலை ரொம்ப கடினமான மலை. நம்ம பழனி மலை மாதிரி படிக்கட்டெல்லாம் கிடையாது. ஏறி போறதுக்குள்ளேயே நாக்கு தள்ளிப்போச்சு.

11.30 மணிக்கு மலைமேல்போய் சேர்ந்தா கொண்டு போன தண்ணி யெல்லாம் தீர்ந்து போச்சு. திரும்ப இறங்கி வந்தோம். 2 நாள் போய்

2 ஓவியங்கள் வரைந்தேன். சுற்றுலா பயணிகளில் ஒருத்தன் கருநாகம் கடித்து செத்துப்போயிட்டான்.

ரூம்மெல்லாம் கிடையாது. ரூம்மில் தங்குவதற்கு கையில் காசும் கிடையாது. அங்கிருந்த ஒருத்தர், "தம்பிகளா! நீங்க ஊருக்குப் போயிடுங்க. நேற்று ஒருத்தரை கருநாகம் கடித்து செத்துப் போயிட்டாரு"ன்னு சொன்னாரு.

"ஐயா.. நாங்க உஷாராக இருப்போம். ராஜகிரி மலையில் செடி, கொடிகள் அதிகம். இந்த ராணி மலையில் அப்படி இல்லை. இனிமேல் அங்கு போக மாட்டோம்ன்னு சொல்லி வரைந்துவிட்டு போனோம். இரவு அவர் வீட்டில் படுத்தோம்.

படுத்து நல்லா அசந்து 12 மணிக்கு தூங்கிக் கொண்டிருக்கும்போது, காதுக்குள்ள யாரோ கொடஞ்சாங்க. திரும்பி பார்த்தா பெரிய சைஸ் பச்சைத் தவளை. இப்படியெல்லாம் வாழ்க்கை துவங்கி, திருப்பதியில் 35 ரூபாய் மட்டும் செலவு செய்து 7 நாட்கள் கோவில் வராண்டாவிலே படுத்து திருப்பதி கோயிலை வரைந்தேன்.

தஞ்சாவூர் கோவில் ஓவியத்தையும் வரைந்தேன். மிகச் சிறந்த 16 ஓவியங்களில் இந்த ஓவியம் உண்டு. மதுரையில் 18 மணி நேரம் உட்கார்ந்து மதுரை மீனாட்சி அம்மன் கோவில் வரைந்தேன். கன்னியாகுமரியில் காந்தி மண்டபம் வரைந்தேன். கன்னியாக்குமரி ஒன்னேகால் ரூபாய் ரூம் வாடகை. எங்க பையெல்லாம் உள்ளே வைத்துவிட்டு வெளியே படுத்துட்டு, கன்னியாகுமரி காந்தி மண்டபத்தையும், சமுத்திர அலைகளையும் வரைந்துவிட்டு வருவோம்.

1964ம் ஆண்டு எந்த இடத்தில் உட்கார்ந்து படம் வரைந்தேனோ, அங்க அடுத்த 6 ஆண்டுகளில் சினிமாவுக்காக போய் டூயட் பாடினேன். வாழ்க்கையில் எவ்வளவு வாய்ப்பு கிடைக்குது பாருங்க. இப்படி 6 வருடங்கள் படித்தேன். பெரிய ஓவியர்களெல்லாம் என்னை பார்த்து, "தம்பி நீ தப்பு பண்ணிட்டப்பா"ன்னு சொன்னாங்க.. "என்ன தப்பு"ன்னு கேட்டேன். "நீங்க கொஞ்சம் லேட்டா பிறந்துட்டீங்க"ன்னு சொன்னாங்க.

"எவ்வளவு லேட்டு"ன்னு கேட்டேன். "400 வருடம் லேட்டா பிறந்துட்டீங்க"ன்னு சொன்னாங்க. அட பாவிகளான்னு நினைச்சிக்கிட்டு, "என்னது, 400 வருடம் லேட்டாவா?"

"ஆமாங்க. நீங்க போடுற ஓவியம் எல்லாம் மறுமலர்ச்சி காலத்திற்கான ஓவியம். அது மாதிரி இப்ப எல்லாம் வரைவது கிடையாது. மாடர்ன் ஆர்ட் வந்துடுச்சி. கண்ணு மூஞ்சி வச்சு யாரும் பொம்மை போடுறது இல்லை. அட பாவிகளா. வீட்டில் வைத்துள்ள லட்சுமி, சரஸ்வதி படத்தின் கீழ், ராஜ ரவிவர்மான்னு போட்டிருக்கும். யாராவது பார்த்திருக்கிறீர்களா?



அந்த அளவுக்கு இது ஓவியம், மனிதன் வரைந்தது, ராஜா ரவிவர்மான்னு ஒருத்தர் வரைஞ்சதுன்னு தெரியாதப்ப, திடீர்னு மாடர்ன் ஆர்ட்டுக்கு போன்னு சொன்னா,

ஓவியக்கலை, மனிதனுடைய அத்தியாவசிய தேவை அல்ல. மனிதனுக்கு தேவையானது காற்று. அதை ஆண்டவனாக கொடுத்துவிட்டான். அடுத்தது தண்ணீர்... அத இப்ப காசு கொடுத்து வாங்கிக்கிறோம். மூன்றாவது சாப்பாடு, அடுத்து, மானத்தை மறைப்பதற்கு உடை.

இதுஎல்லாம் கிடைச்சிட்டா, மியூசிக் மேல ஆர்வம் வருது. ஏழாவது, எட்டாவது இடத்துலத்தான் ஓவியம் இருக்கு. அதுல போய், நவீன ஓவியம்னு போயிட்டிங்கன்னா, யாருக்கு ஓவியம்ன்னு தெரியும்?

மக்களுக்கு சம்பந்தப்படாத, மக்களுக்கு புரியாத, மக்களை சென்று அடையாத எந்தக் கலையும் வளர்ந்ததாக சரித்திரமே இல்லை.



# “வாழ்க்கையைப் போலவே மரணமும் மெய் மரணத்தைக் கண்டு எனக்கு பயமில்லை”

## – எழுத்துச் சித்தர் பாலகுமாரன்

❑ மகிழினி

“எனக்கான மரணத்தின் தேதியை நான் கண்டுகொண்டது, கணிப்பு, வாழ்க்கை மீதான தேடலுக்குக் கிடைத்த விடை. வாழ்க்கையைப் போலவே மரணமும் மெய். மரணத்தின் தேதியையும் என் வாழ்விலிருந்து தான் கண்டுகொண்டேன். மரணத்தைக் கண்டு, எனக்கு எந்தப் பயமும் இல்லை. தைரியமாக, நான் அதை எதிர்கொள்வேன்”.

எழுத்து சித்தர் பாலாகுமாரன், நமது இதழுக்கு அளித்த பேட்டியின் போது முத்தாய்ப்பாக கூறியது இது.

மூன்று தலைமுறைகளாய், தன் தங்கத் தமிழால், வாசகர்களைக் கட்டிப் போட்ட எழுத்துச் சித்தர் தனது 71வது வயதில் தனது மூச்சை நிறுத்திக் கொண்டார். உடல் நலக்குறைவால் கடந்த மே மாதம் 15 ம் தேதி சென்னை தனியார் மருத்துவமனையில் அவரது உயிர் பிரிந்தது.

கடந்த ஆண்டு ஆகஸ்ட் இதழில் நமது இதழுக்கு அளித்தபேட்டிக்காக அவரை சந்தித்தேன். ஒவ்வொரு கேள்விக்கும் அருவி மாதிரி பதில் வந்து விழுந்தாலும், ஒவ்வொரு துளியிலும் அவ்வளவு நேர்த்தி. கண் பார்த்துப் பேசும் போதே, எதிர்த் தரப்பை விழிகளால் ஊருடும் ரசவாதம் அவரிடம் இருந்தது. முதுமை அவருக்குப் பெரும் முதிர்ச்சியையும், அழகையும் அளித்திருந்தது.





அந்த சந்திப்பின் போது, அவரது பதில்களில் சிலவற்றை இப்போது வெளியிடுவது பொருத்தமாக இருக்கும்.

- **சிறுகதைகளுக்கான ஆயுள் என்பது ஒரு வாரம் எனச் சுருங்கி விட்ட இன்றைய அவசர உலகில், அதனால் உளவியல் மாற்றங்களை ஏற்படுத்த முடியும் என்று நம்புகிறீர்களா?**

பதில்: சிறுகதை ஏற்படுத்தாது. ஆனால், புனைவு ஏற்படுத்தும். சிறுகதை என்பது, பேருந்து நிறுத்தத்தில் இருந்து பஸ் ஏறுவதற்கான இடைவெளியில் உள்ளது. புனைவு என்பது, நம்மோடு பல மணி நேரம் உரையாடுவது. ஒரு புனைவு ஏறக்குறைய, 14 மணி நேரம் நம்மோடு உரையாடும் போது, நிச்சயம் அந்த மாற்றம் நிகழும்.

புனைவில் உள்ள கதாபாத்திரங்கள் நம் மனதில் சென்று, அதற்கான எதிர்வினையை நிச்சயம் நிகழ்த்தும். அப்படி, தங்கள் வாழ்வில் பல்வேறு மாற்றங்களை நிகழ்த்தியதாக வாசகர்கள் பலரும் என்னிடம் தெரிவித்திருக்கிறார்கள். படைப்பின் பலமே அது தான். வாசகர்கள் தேடலுடன் இருந்தால், புனைவு நிச்சயம் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தும். அதில் எந்த மாற்றமும் இல்லை.

- **இன்னும் சில ஆண்டுகளில், குறிப்பிட்ட மாதத்தில், குறிப்பிட்ட தேதியில் இறந்து விடுவேன் என்று பிரகடனப்படுத்துகிறீர்கள். மரணத்தைக் கண்டு உங்களுக்குப் பயமே**

இல்லையா?

நான் ஏன் அதற்குப் பயப்பட வேண்டும்? பயந்தால் என்னை விட்டு அது விலகி விடுமா? அதை நான் நிச்சயம் எதிர்கொண்டாக வேண்டும்.

"எனக்கான மரணத்தின் தேதியை நான் கண்டுகொண்டது, கணிப்பு, வாழ்க்கை மீதான தேடலுக்குக் கிடைத்த விடை. வாழ்க்கையைப் போலவே மரணமும் மெய். மரணத்தின் தேதியையும் என் வாழ்விலிருந்து தான் கண்டுகொண்டேன். மரணத்தைக் கண்டு, எனக்கு எந்தப் பயமும் இல்லை. தைரியமாக, நான் அதை எதிர்கொள்வேன்.

வெளியே நான் இருப்பது மட்டும் தான் உங்களுக்குத் தெரியும். ஆனால், உள்ளே என்ன நிகழ்கிறது என்பது எனக்கு மட்டுமே தெரியும். உள்ளே வெள்ளை உலகம். பேரமைதி. அந்த அமைதியில் நான் மிதந்து கொண்டிருக்கிறேன். இரவில் நான் உறங்குவதில்லை.

எல்லோரும் சாப்பிட்டு முடித்து உறங்கச் செல்லும் போது, நான் தனித்திருப்பேன். அது எனக்கான உலகம். எல்லோரும் விழித்திருக்கும் போது, நான் உறங்கச் செல்வேன். எல்லோரும் உறங்கச் செல்லும் போது, நான் விழித்திருப்பேன். இந்த எதார்த்த உலகோடு என் தொடர்புகளைத் துண்டித்து விட்டு, எனக்கான உலகத்தில் மிதந்து கொண்டிருப்பேன்.



சந்திப்பு முடிந்து விடைபெற்று வெளியே வந்த போது, ஒரு பெரும் நூலகத்தில் இருந்து வெளியே வந்தது போன்ற ஒரு உணர்வு தான் ஏற்பட்டது.

மரணத்தைப் பற்றிய அவரது தெளிவான கருத்து ஆச்சரியத்தை ஏற்படுத்தும் வகையில் இருந்தது. இப்போது அவர் நம்முடன் இல்லை.

இலக்கியத்தில் மட்டுமல்லாமல், சினிமாத்துறையிலும் முக்கிய ஆளுமையாக இருந்தவர் பாலகுமாரன். பாட்ஷா, குணா, முகவரி, சிட்டிசன் உள்ளிட்ட படங்களுக்கும் வசனம் எழுதியிருக்கிறார்.

பாலகுமாரனின் மறைவு இலக்கியத் துறைக்கும் திரைத்துறைக்கும் மிகப் பெரும் இழப்பு என்றால் அது மிகையாகாது. அவரது ஆன்மா சாந்தியடையட்டும்.



படித்ததில் பிடித்தது

# யார் வருமானத்தில் குடும்பம் நடத்துகிறார்?



**ஒருவர் வாரந்தோறும் கோயிலுக்குச் செல்லும்போது அங்கிருந்த ஒரு பிச்சைக்காரனுக்கு ஒரு ரூபாய் போடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்..**

6 மாதம் கழிந்த பிறகு, அவர் அந்தப் பிச்சைக்காரனுக்கு 75 பைசாக்கள் மட்டும் போட்டார்...

ஒரு வருடம் கழித்தது. இப்போது அவர் அந்தப் பிச்சைக்காரனுக்கு 50 காசுகள் மட்டும் போட்டார். அடுத்த 2 வருடங்களில் இதுவும் குறைந்து அவர் பிச்சைக்காரனுக்கு 25 காசுகள் மட்டுமே போட்டார்...

இத்தனை நாள் பொறுத்த பிச்சைகார(ர்)ன், (அவருக்கும் வயசாகிடுச்சில்ல!) ஏன் இப்படி படிப்படியாக குறைந்த காசுகளைப் பிச்சை போடுகிறார் எனக் கேட்க,..

அந்த மனிதரும் சின்ஸியராக, 'மிஸ்டர் பெக்கர், முதலில் நான் பேச்சிலர், 1 ரூபாய் போட்டேன், பிறகு கல்யாணமாச்சு, பெண்டாட்டியையும் கவனிக்கணும், 75 காசு போட்டேன், பிறகு குழந்தை பிறந்தது, 50 காசு போட்டேன். இப்போ அந்தக் குழந்தையை ஸ்கூலில் சேர்க்கக் காசு சேமிக்க வேண்டியிருக்கு, அதனால் 25 காசு போடறேன்' என்றார்...

பிச்சைக்காரர் யோசித்தார். 'அப்போ என் வருமானத்தில் தான் நீ குடும்பம் நடத்தறேன்னு சொல்லு' என்றார்!!

## கோபத்தை அடக்கும் வழி

- கோபம் வருதா.....?
  30 வரைக்கும் எண்ணிவிட்டு பேசு.
- எதிரில் இருப்பவன் பலசாலியா....?
  100 வரை எண்ணிவிட்டு பேசு.
- எதிரில் இருப்பது மனைவியா....
  எண்ணிக்கிட்டே இரு ...
  நிப்பாட்டாத....

## குறையும் சோறு



ஒவ்வொரு விவசாயியின்
தற்கொலையிலும்,
நம் ஒவ்வொரு வீட்டிலும்
ஒரு பிடி சோறு குறைகிறது.

## பிரிச்சி மேய்ஞ்சுட்டோம்

ஒரு பையன் ஒரு செய்யுள் படிச்சிட்டு இருந்தான். யார் எழுதியதுன்னு கேட்டா, "மாநிக் கவாஸ்கர்" ன்னான். குழம்பிப்போய் புத்தகத்தை வாங்கிப் பார்த்தால்....

அது, "மாணிக்க வாசகர்"

பசங்க கிட்ட படிச்சுட்டியா னு கேட்டா பிரிச்சு மேய்ஞ்சுட்டோம் னு சொல்றாங்களே, அது இது தானோ!

## அறிவுரை

மகனிடம் சொல்லி வளருங்கள், "மனைவிக்காக பெற்றோரை கைவிடாதே" என்று...

மகளிடம் சொல்லி வளருங்கள், "கணவனின் பெற்றோரையும் உன் தாய் தந்தைப் போல் கவனி" என்று....



# மௌனமே சில கேள்விகளுக்கு பதில்...

- இயக்குநர் ஜான் மகேந்திரன்

**என்றாவது இரவில் என் கைப்பேசி அடித்தால் அது நிச்சயமாக என் தந்தையிடம் இருந்து வரும் காலாக தான் இருக்கும். நிச்சயமாக ஏதோ ஒரு நல்ல திரைப்படத்தை பார்த்து விட்டு, அந்த இயக்குனருடன் உடனடியாக பேச வேண்டும் என்று அழைப்பார்.**

இன்றும் அப்படி ஒரு கால் வந்தது. அன்று அவர் பார்த்தது முன்னறிவிப்பு என்ற மலையாள திரைப்படம். மம்மூட்டி, நெடுமுடி வேணு, பிரிதிவிராஜ் மற்றும் அபர்ணா கோபிநாத் நடித்தது.

முன்னறிவிப்பு படத்தை இயக்கியவர் கேமராமேன் வேணு. மலையாளத்தில் மிக சிறந்த இயக்குனர்களிடம் பணியாற்றிய அனுபவமிக்கவர் வேணு. தமிழில் கமல்ஹாசன் நடித்த குணா, ராஜிவ் மேனன் இயக்கத்தில் வெளிவந்த மின்சார கனவு போன்ற படங்களின் ஒளிப்பதிவாளர்.

ஒரு ஒளிப்பதிவாளர், இயக்குனராக உரு மாறும்போது, மிக சிலரே வெற்றி அடைகின்றனர். அப்படி வெற்றி அடைந்தவர்களில் மலையாளத்தில் வேணு, தெலுங்கில் தேஜா, நம் தமிழில் கே.வி.ஆனந்த், காக்கா முட்டை மணிகண்டன் மற்றும் இன்று உலகவில் பல விருதுகளை வாங்கி குவித்து கொண்டிருக்கும் டூலெட் படத்தை இயக்கிய செழியனை குறிப்பிட்டு சொல்லலாம்.

இந்த வரிசையில் வேணு இயக்கிய எல்லா படங்களுமே மிகவும் பேசப்பட்ட படங்கள். இதில் நான் மேலே சொன்னது போல், அப்பா சிலாகித்து பேசிய முன்னறிவிப்பு அடக்கம்.

ஒரு சிறைச்சாலை அதிகாரி தன் சுயசரிதையை, எழுத ஆசைப்பட்டு, கோஸ்ட் ரைட்டரை தேடி கொண்டிருக்கும் நேரத்தில், ஒரு பத்திரிகை எடிட்டர் மூலம், அவருக்கு அபர்ணா அறிமுகமாகிறார்.

நெடுமுடி வேணு, அபர்ணாவிடம் சிறையில் தான் செய்த சாதனைகளை பட்டியலிட, தான் பல வருடமாக கவிதை என்று கிறுக்கி வைத்திருந்த தாள்களை கொடுக்க, அதே நேரம் அங்கு நின்று கொண்டிருந்த மம்மூட்டியை காட்டி " இவ்வளவு எதுக்கு, இவருக்கு ரெண்டு வருஷத்துக்கு முன்னாடியே விடுதலை கிடைச்சிருச்சு. ஆனாலும் அவர் இந்த ஜெயிலை விட்டு போகலைன்னா பாத்துக்குங்க, நான் எந்த அளவுக்கு இவங்கள பாத்துக்கிறேன்னு..."

அப்பாவி




தோற்றமும், வசீகரமான புன்னகையும் கொண்ட மம்மூட்டியை பார்த்த அபர்ணா, இவர் என்ன குற்றத்திற்கு சிறைக்கு வந்தார் என்று கேட்க, மூன்று பெண்களை கொலை செய்த குற்றத்திற்கு மம்மூட்டி சிறை வந்ததை கூற அபர்ணா நம்ப முடியாமல் ஆச்சர்யமாக பார்ப்பது, நெடு முடி தான் எழுதிய தாள்களை எடுத்துவர உள்ளே சென்ற வேளையில், மம்மூட்டி அபர்ணாவிடம், தான் அந்த கொலைகளை செய்யவில்லை என்று கூற அபர்ணா அதிர்ச்சியடைகிறார்.

புத்தகம் சம்பந்தமாக அங்கு இருக்கும் சிறைக் கைதிகளை சந்திக்க விரும்புவதாக அபர்ணா கூற, நெடு முடி வேணு அதற்கான ஏற்பாடுகளை செய்து கொடுக்கிறார்.

இந்த நேரத்தில் அபர்ணா, மம்மூட்டியின் பேச்சுகளில் ஈர்க்கப்படுகிறார். வாழ்க்கையை பற்றி, விடுதலையை பற்றி, உறவுகளை பற்றி மம்மூட்டியின் கண்ணோட்டத்தை கேட்டவுடன், ஒரு பிரபல பத்திரிகையில் மம்மூட்டியை பற்றிய ஒரு கட்டுரையை எழுதுகிறார் அபர்ணா. இதுவரை கோஸ்ட் ரைட்டராக எழுதி வந்த அபர்ணாவிற்கு, இந்த கட்டுரை பெரும் பெயரை ஈன்று கொடுக்கிறது. அதே நேரம் மும்பை பதிப்பாளர் ஒருவர் அபர்ணாவிற்கு, மம்மூட்டியை பற்றி ஒரு முழு புத்தகம் எழுத சந்தர்ப்பம் கொடுக்கிறார்.

ஆனால் contract படி புத்தகம் ஒரு மாதத்திற்குள் வெளி வர வேண்டும் என்றும், இல்லை என்றால் பிரச்சனை என்றும் அவர் கூற, அபர்ணா அதற்கு ஒப்புக்கொள்கிறார்.

எல்லாவற்றையும் வித்தியாசமாக அணுகும் மம்மூட்டி எதற்காக அந்த மூன்று பெண்களை கொன்றார்? இல்லை அவர் சொன்னது போல் மம்மூட்டி உண்மையில் கொலை செய்ய வில்லையா? இந்த கேள்விக்கு விடை மம்மூட்டியிடம் இருந்து கிடைத்து விட்டால், ஒரு சென்சேஷனல் புத்தகம் எழுதிய பெருமை தனக்கு கிடைக்கும் என்று நம்புகிறார் அபர்ணா.

அடுத்த சில நாட்களில், மம்மூட்டியை சிறையில் இருந்து அழைத்து வந்து, ஊருக்கு ஒதுக்குபுறமாக பெங்காலிகள் மட்டும் தாங்கும் மேன்ஷனில் தங்க வைக்கிறார் அபர்ணா. தினமும் அவருக்கு உணவு கொண்டு வந்து கொடுக்க, ஒரு சிறுவனையும், மம்மூட்டி எழுதுவதற்கு வேண்டிய பேப்பர் பேனாக்களை கொடுக்கிறார்.

அவருடைய கடந்த காலத்தை பற்றியும், அவர் மனதை பாதித்த விஷயங்களையும், அவரை கொலை செய்ய தூண்டிய காரணத்தை பற்றியும் மனம் திறந்து எழுதுமாறு கூறுகிறார் அபர்ணா. அபர்ணாவின் இந்த திடீர் விண்ணப்பதால் சற்று குழம்பி போகிறார் மம்மூட்டி. சம்பவங்கள் நடந்து பல வருடங்கள் ஆனதால், பல விஷயங்கள் ஞாபகம் இல்லை என்று அவர் கூற, நிதானமாக யோசித்து எழுதுமாறு கூறுகிறார் அபர்ணா.



வினாடிகள் நிமிடங்களாக, நிமிடங்கள் மணி நேரங்களாக, மணி நேரங்கள் நாட்களாக, நாட்கள் வாரங்களாக, மம்மூட்டி மட்டும் எதையோ யோசித்தபடி, கையில் பேனாவுடன் தன் முன் வைக்கப்பட்ட வெள்ளை தாள்களை பார்த்தபடி இருக்கிறார்.

அதே நேரம், மம்மூட்டியால் கொலை செய்யப்பட்ட பெண்களை பற்றியும் விசாரிக்க தொடங்குகிறார் அபர்ணா. ஆனால் அவர்கள் கொலை செய்யப்பட்ட காரணங்கள் புலப்படவில்லை. நிச்சயமாக மம்மூட்டி மட்டும்தான் அதற்கான காரணத்தை கூற முடியும் என்பதை உணர்கிறார் அவர்.

அதே நேரம், புத்தகத்தின் முன்னேற்றம் பற்றி மும்பையில் இருந்து தொலைபேசி அழைப்புகள் வர தொடங்க அபர்ணா, மம்மூட்டியின் மேல் எரிச்சல் அடைகிறார். எப்படி அவரால் பல நாட்கள் எதுவும் எழுதாமல் இருக்க முடிகிறது என்று மம்மூட்டியிடம் கோபத்தை கொட்டுகிறார். ஒரு மனிதன் மறக்க நினைக்கும் விஷயங்களை ஞாபகம் செய்து, அவரை வேதனைப்படுத்தி ஒரு புத்தகம் எழுத வேண்டிய அவசியம் என்னவென்று அபர்ணாவின் வருங்கால கணவன் பிரித்விராஜ் கேட்க, அபர்ணா பதில் கூற முடியாமல் தவிக்கிறார்.

அதே நேரம் மும்பை பதிப்பகம் கொடுத்த காலக்கெடு முடிய, அபர்ணாவிற்கு நோட்டிஸ் அனுப்பப்பட, அபர்ணா கோபமாக மம்மூட்டியை தேடி வருகிறார். அவர் மேல் வைத்த நம்பிக்கை வீண் போனதென்றும், வேண்டுமென்றே எழுதாமல் தன்னை ஏமாற்றியதாகவும், அவருக்கு சிறைதான் சரியான இடம் என்றும், அவரை சாடிஸ்ட் என்றும் கூறி அபர்ணா தன் கோபத்தை கொட்டி தீர்க்க, எதிர்பாராத விதமாக மம்மூட்டி எழுதி முடிக்கப்பட்ட பேப்பர் பண்டலை கொடுக்க, அதிர்ச்சியடைந்த அபர்ணா அதை உடனே படிக்க தொடங்குகிறார்.

அதே நேரம் மீண்டும் சிறை செல்ல, தன் துணிமணிகளை மடிக்க தொடங்குகிறார் மம்மூட்டி. மம்மூட்டி எழுதியதை அதிர்ச்சி கலந்த ஆர்வத்துடன் அபர்ணா படிக்க, ஒரு சில சமயம் அதிர்ச்சியில் மம்மூட்டியை பார்க்கிறார். மொத்த பக்கங்களையும் படித்து முடித்த அபர்ணா, இனம் புரியாத அதிர்ச்சியில் உறைந்து போயிருக்க, மம்மூட்டி வசீகர புன்னகையுடன் அவர் அருகில் வந்து நின்று, சற்றும் எதிர்பாராத நேரத்தில் ஒரு இரும்பு தடியால் அபர்ணாவின் தலையில் அடித்து கொல்கிறார்.

அடுத்த காட்சியில் மம்மூட்டி சிறையில் படுத்தபடி இருக்க, பின்னால் இருக்கும் சுவரில், மம்மூட்டி கொலை செய்த மற்ற மூன்று பெண்களின் புகைப்படத்தோடு இப்போது அபர்ணாவின் புகைப்படமும்.

மம்மூட்டி எழுதியது என்ன? அபர்ணா அதிர்ந்து போய் அமரும் அளவிற்கு அதில் என்ன எழுதப்பட்டிருந்தது. இதற்கு விடை கடைசி வரை கூறப்படவில்லை.... இதுதான் இயக்குனர் மகேந்திரனுக்கு பிடித்தது... படம் முடிந்த பிறகும் அது என்னவாக இருக்கும் என்று நம்மை யோசிக்க வைத்த சாமர்த்தியம். வாழ்க்கையில் பல விஷயங்களுக்கு விடை தெரிந்து விடுவதில்லை.... உண்மையில் சொல்லபோனால் விடை தேவை இல்லை....

இதே போல் சில மாதங்களுக்கு முன் ஒரு மலையாள படத்தை பார்த்து விட்டு, பின்னிரவில் என்னை கைபேசியில் அழைத்தார் என் தந்தை. அன்று அவர் பார்த்து ரசித்த படம், ஷட்டர். லால், ஸ்ரீனிவாஸ், வினை போர்ட் மற்றும் பலர் நடித்தது.

இரண்டு பகல் இரண்டு இரவுகளில் நடக்கும் கதை. நியூ வேவ் சினிமா என்று அழைக்கப்பட்ட இந்த படத்தை இயக்கியவர் ஜாய் மாத்யூ.

gulfல் இருந்து தன் மகளின் திருமண நிச்சயதார்த்தத்திற்கு கோழிக்கோடு வரும் லாலுக்கு ஏற்படும் ஒரு மறக்க முடியாத அனுபவமே ஷட்டர் கதை. தன் வீட்டின் அருகில், சிறிது சிறிதாக பல கடைகளை கட்டி வாடகைக்கு விட்டு இருக்கிறார் லால். அதில் ஒரு கடை மட்டும் வாடகைக்கு விடப்படாமல், இரவு வேளைகளில் தன் நண்பர்களுடன் மது அருந்த உபயோகப்படுத்துகிறார் லால்.

அப்படி ஒரு நாளில், மது போதையாமல், தனக்கு



பழக்கமான ஆட்டோ நண்பனுடன் மது வாங்க செல்ல, லால் பஸ் ஸ்டாண்டில் ஒரு பெண்ணை பார்க்க, மதுவை போல் இவளும் விற்பனைக்கே என்று லாலின் அனுபவம் உணர்த்த, அவளையும் அழைத்து கொண்டு தன்னுடைய கடைக்கு செல்கிறார். இத்தனைக்கும் இந்த கடையில் இருந்து பார்த்தால் லாலின் வீடு தெரியும். அழைத்து வந்த பெண்ணிற்கு உணவு வாங்கி வருவதாக கிளம்பும் ஆட்டோ நண்பன், லாலின் பாதுக்காப்பிற்காக அந்த கடையின் ஷட்டரை பூட்டி விட்டு செல்கிறான்.

துரதிர்ஷ்டவசமாக அவன் போலீசிடம் மாட்டிக்கொள்ள லாலுவும் அந்த விலை மாதுவும் அந்த கடையின் உள்ளே அந்த இரவும், அடுத்த நாள் முழுவதும் மாட்டி கொள்கின்றனர்.

அந்த அழுக்கு பிடித்த இடம் லாலுக்கு போதி மரமாக மாறுவதும், காசு கொடுத்தால் யாரிடமும் படுக்கும் விலை மாது, அவருக்கு விலை மதிப்பில்லாத வாழ்க்கை தத்துவத்தை உணர்த்துவதுதான் ஷட்டரின் கதை. பல கோடிகள் செலவு செய்து, உலகில் யாரும் காணாத அபூர்வ இடங்களில் படப்பிடிப்பு நடத்தி, இதுவரை யாரும் சொல்லாத கதை என்று விளம்பரம் செய்து, அநியாயத்திற்கு எதிர்பார்ப்பை கிளப்பி விட்டு, படம் வெளிவரும்போது அது கருப்பு வெள்ளை காலத்தில் இருந்து சொல்லி வந்த கதைதான் என்பதை அறிந்து தான் மீண்டும் ஏமாற்றப்பட்டதை உணர்ந்து படம் பார்ப்பவர்கள் திட்டி கொண்டே வெளியே வரும் இந்த காலத்தில், ஷட்டர் ஒரு அபூர்வ படம்.

அழுத்தமான கதை சொல்ல, சொற்ப கதாபாத்திரங்கள் போதும், மிக குறைந்த லொகேஷன்ஸ்போதும். ஆனால் சொல்லப்படும் விஷயம் ஆழமாக, உண்மையாக இருந்தால் அது பார்ப்பவர்கள் மனதை விட்டு என்றும் விலகாது என்று











100% Natural



Healthy



Affordable

Natural

# SESAME OIL

## from NatureMills

**COLD PRESSED** **UNREFINED**




### Health Benefits

- Boosts dental health, and promotes healthy hair.
- Helps to treat anxiety and depression.
- Protects against atherosclerosis, heart attacks and strokes.
- Helps to improve growth of bones and reduces risk of osteopprosis.



NO CHEMICALS



NO PESTICIDES



NO ADULTERATION




LICENSED

- also available -

100% Natural, Cold Pressed, Unrefined

**PEANUT OIL**




**FREE SHIPPING**
for orders over $50

Shop online @ www.naturemills.com


info@naturemills.com


twitter.com/nature_mills


facebook.com/naturemills


instagram.com/nature_mills




உணர்த்திய படம் ஷட்டர். நியூ வேவ் சினிமா என்று கொண்டாடப்பட்ட, பல உலக விருதுகளை வாங்கி குவித்த, இந்திய பல மொழிகளில் எடுக்கப்பட்ட இந்த படத்தை இயக்கிய ஜாய் மாத்யூவிற்கு வயது அறுபத்தி ஒன்பது.

1986ல் அம்மா அறியான் என்ற படத்தில், ஜான் ஆபிரகாம் இயக்கத்தில் நடித்த ஜாய் மாத்யூ மீண்டும் 2102ல் இயக்குனராக அவதாரம் எடுக்கிறார். இன்றைய இளம் இயக்குனர்கள் கூட, தொட தயங்கும் ஒரு கதை களம். வித்தியாசமான திரைக்கதை, பாத்திரப் படைப்பில் நேர்த்தி, அறுபத்து ஒன்பது வயதில் ஜாய் மாத்யூ, நியூ வேவ் சினிமா படைக்கிறார்.

தொடர்ந்து புத்தங்கங்கள் படித்து நம்மை செம்மைப்படுத்தி கொண்டும், புதிது புதிதாக வரும் படைப்புகளை ரசித்து கொண்டும், தொடர்ந்து நம்மை சுற்றி நடக்கும் சின்ன சின்ன விஷயங்களை ரசித்து கொண்டும், நம்மை நாமே மெருகேற்றி கொண்டால், outdated என்ற வார்த்தை outdated ஆகி போகும்.

இதே போல் ஒரே படத்தை மாணவர்களை மூன்று முறை அப்பா பார்க்க சொன்ன படம், தோண்டி முதலும் திரிக்ஷியமும். ஆம் மீண்டும் ஒரு மலையாள படம்தான்.

படத்தின் திரைக்கதைக்காகவும், அதில் நடித்த நடிகர்களின் நடிப்பு திறமைக்காகவும், அவர்களின் வசன உச்சரிப்பிற்காகவும், அப்பா இந்த படத்தை மாணவர்களை மூன்று முறை பார்க்க வைத்தார். மஹேஷிண்ட பிரதிகாரம் என்ற படத்தின் மூலம் இயக்குனராக முத்திரை பதித்த திலேஷ் போத்தன் தான், இந்த படத்தின் இயக்குனர். உதவி இயக்குனராக வாழ்க்கையை தொடங்கி, பின் நடிகராகி, இன்று மிக சிறந்த இயக்குனராக விஸ்வரூபம் எடுத்தவர்தான் இந்த திலேஷ் போத்தன்.



புதிதாக திருமணமான சுராஜும், அவர் மனைவியும், அவசர தேவைக்காக தாலி சரடை விற்க டவுன் பஸ்ஸில் பக்கத்து ஊருக்கு பயணித்து கொண்டிருக்கும் வேளையில், அதே பஸ்ஸில் அவர்களின் பின்னால் அமர்ந்து பயணிக்கும் பாஹத் பாசில், அந்த தாலி சரடை மிக சாமர்த்தியமாக திருடி தப்பிக்கும் வேளையில் மாட்டி கொள்ள, மொத்த பஸ்ஸும் போலீஸ் ஸ்டேஷனுக்கு திருப்பப்படுகிறது.

அதற்குப்பின் கதை முழுக்க நடப்பது போலீஸ் ஸ்டேஷனில். தான் திருடவே இல்லை என்று அப்பாவியாக சொல்லும் பாஹத் பாசில், நிச்சயமாக இவன்தான் திருடினான் என்று அடித்து சொல்லும் சுராஜ் மனைவி, நடப்பது புரியாமல் தன் கையால் ஆகாத கோபத்தை மனைவியிடம் காட்டும் சுராஜ், அந்த ஸ்டேஷனில் தன்னால் தான் எல்லாம் நடப்பது போல் காட்டி கொள்ளும் அலன்ஸியர், அடித்து விட்டு பயப்படும் இன்ஸ்பெக்டர் சிபியும், கண் சிமிட்ட மனமில்லாமல் இவர்களின் நடிப்பு திறமையை பார்த்து கொண்டிருக்கலாம்.

நம்ப முடியாத கதையை உருவாக்கி, ட்விஸ்ட் என்ற பெயரில் ரீலுக்கு ஒரு குழப்பம் செய்து, என் நடிப்பின் மொத்த வித்தையையும் காட்டுகிறேன் பார் என்று ஓவர் ஆக்ட்டிங் செய்து, நிஜ வாழ்க்கையில் நாம் பேசாத வசனங்களை எழுதி , அதை மிக செயற்கையாக பேசி, பிரேம் முழுக்க கதாபாத்திரங்களை நிரப்பி, யார் யாருக்கு என்ன சொந்தம் என்று கடைசி வரை புரியாத வகையில் உலாவ விட்டு, fast cut என்ற பெயரில் நம் மனதில் பதியாமல் காட்சிகள் படு வேகத்தில் கடந்து செல்ல, இப்படி எல்லாம் செய்து பார்வையாளனை இன்டெர்வெல் சமயத்திலே தெறித்து ஓடவிடும் படங்களின் மத்தியில், தொண்டிமுதலும் திரிக்ஷியமும் ஒரு அபூர்வ தரிசனம்.

தொண்டிமுதலும் திரிக்ஷியமும் படத்தின் கதையை கதை என்று கூட கூறிவிட முடியாது. ஒரு சிறு சம்பவம். பஸ் பயணத்தில் தங்க சங்கிலி திருடு போகிறது. ஆனால் இந்த சின்ன சம்பவத்தை வைத்து கொண்டு, நாம் தினசரி சந்திக்கும் சாதாரண வர்க்க கதாபாத்திரங்களை வைத்து கொண்டு நம்மை கடைசி வரை கட்டி போடும் சாமர்த்தியம் திலேஷ் போத்தனுக்கு கய் வந்த கலை. படத்தை இயக்க வேண்டும் என்று ஆசைப்படுபவர்களும், நடிக்க வேண்டும் என்று ஆசைப்படுபவர்களும் கட்டாயம் பார்க்க வேண்டிய படம்.

ஒரு நடிகர் underplay செய்வது என்றால் என்ன என்பதை இந்த படத்தை பார்த்தால் தெரியும். இந்த படத்தில் பாஹத் பாசில் மிக இயல்பாக நடித்தார் என்பதோ, சுராஜ் கதாபாத்திரமாகவே வாழ்ந்திருக்கிறார் என்பதோ, அலென்ஸியர் என்கிற மிக திறமையான நடிகனின் சிறந்த நடிப்பு என்பதோ நமக்கு பிரமிப்பு இல்லை, ஆனால், இந்த படத்தில் நடிகர் அலென்சியரை தவிர, போலீஸ்காரர்களாக நடித்த அத்தனை பேரும் நிஜ வாழ்விலும் போலீஸ்காரர்கள்.

பலராலும் பாராட்டப்பட்ட இன்ஸ்பெக்டர் கதாபாத்திரம் செய்த சிபி தாமஸ் நிஜ வாழ்க்கையிலும் இன்ஸ்பெக்டர். இங்கு நாம் கவனிக்க வேண்டியது,

திலேஷ் போத்தனின் ஆளுமை. ஒவ்வொரு கதாபாத்திரம் உருவாக்கப்பட்ட விதம், அதற்காக தேர்வு செய்யப்பட்ட நடிகர்கள், அவர்களுக்கு கொடுக்கப்பட்ட பயிற்சி, எந்த இடத்திலும் எந்த கதாபாத்திரமும் மிகைப்படுத்தப்பட்ட நடிப்பை கெடுத்து விடாமல், கண் கொத்தி பாம்பாய் இருந்துள்ளார் திலேஷ் போத்தன். இந்த வருடம் இந்த படம், தேசிய விருதில் இருந்து தொடங்கி பல விருதுகளை இன்றுவரை வாங்கி குவித்து கொண்டிருக்கிறது.

நடிப்பு என்பது மிக சுலபமான கஷ்டமான காரியம். நிஜ வாழ்க்கையில் ஒரு கவர்மென்ட் ஆபிஸிற்கு சென்று சிறியதில் இருந்து பெரிய அதிகாரிகளை சந்தித்து, அவர்களுக்கு ஏற்றார் போல் நாம் பேசி, நம்மையும் அறியாமல், நம் உடல் மொழி மாறி அவர்களை மனம் கவர்ந்து நமக்கு வேண்டியதை சாதித்து விட்டு வந்து விடுகிறோம்.

ஆனால், இதே காட்சி சினிமாவில் எடுக்கப்படும்போது, எங்கிருந்தோ நமக்கு செயற்கைத்தனம் வந்து விடுகிறது. இல்லையென்றால் நடித்து கொட்டி விடுகிறோம், நிஜ வாழ்க்கையில் செய்வது போல் செய்தால், நடிக்காதது போல் நமக்கு எண்ணம் வந்துவிடும். இங்குதான் நமக்கு திறமையான இயக்குனர் தேவைப்படுகிறார்.

அதே நேரம், நல்ல நடிப்பிற்கு நமக்கு நல்ல எழுத்தாளரும் தேவை, நாம் நிஜ வாழ்வில் தினம் தினம் சந்திக்கும் கதாபாத்திரங்களை உருவாக்கும் எழுத்தாளர்கள் வேண்டும், நிஜ வாழ்க்கையில் நாம் காணும், கேள்விப்படும் சம்பவங்களை வைத்து கதை எழுதும் எழுத்தாளர்கள் தேவை. யதார்த்த வாழ்க்கையில் நாம் பிரயோகிக்கும் வார்த்தைகளை வைத்து கொண்டு வசனம் எழுதும் நல்ல எழுத்தாளர்கள் தேவை.

நடக்கவே முடியாத சம்பவங்கள், செயற்கையான கதாபாத்திரங்கள், சினிமாத்தனமான வசனங்கள் எழுதப்படும்போது, எந்த ஒரு திறமையான நடிகனும் தடுமாறத்தான் செய்வான்.

மலையாளத்தில் இன்றும் நல்ல



திரைப்படங்கள் வந்து கொண்டிருப்பதற்கு முக்கிய காரணம், நல்ல எழுத்தாளர்கள். குறிப்பாக சொல்ல வேண்டும் என்றால், திரைப்பட மொழியை அறிந்த எழுத்தாளர்கள்.

எம்.டி.வாசுதேவன் நாயர், லோஹிதாஸ், பத்மராஜன், அடூர் கோபாலகிருஷ்ணன், ஸ்ரீனிவாசன் இவர்களின் படைப்புகள் நல்ல திரைப்படங்கள் உருவாக முக்கிய காரணமாக இருந்தன. இன்றும் இயக்குனர் லால்ஜோஸ், ரஞ்சித் நல்ல நாவல்களை தேர்ந்தெடுத்து திரைக்கதை அமைத்து தரமான படங்கள் இயக்கி வருகின்றனர்.

தமிழ் திரையுலகில் இன்று எழுத்தாளர்கள் மிகவும் குறைந்துவிட்டார்கள் என்பது இயக்குனர் மகேந்திரனின் வருத்தம். உண்மையில் கதாசிரியர்களாக மட்டுமே பயணிக்க ஆசைப்படும் எழுத்தாளர்கள் இன்று தேவை. இன்று எங்கு சென்றாலும் கதை பஞ்சம். நாடகம், சினிமா, தொலைக்காட்சி என்பவற்றை தாண்டி, நெட்பிலிக்ஸ், அமேசான் ப்ரைம், WEB SERIESக்காக கதை தேடுகின்றனர். புதிய இயக்குனர்கள் தங்களின் முதல் படத்துக்கே எழுத்தாளர்களை நாடும் வழக்கம் தொடங்கி விட்டது.

இன்றும் அப்பாவின் வீட்டிற்கு சென்றால், மூன்றில் எதாவது ஒரு விஷயத்தை செய்து கொண்டிருப்பார். ஒன்று திரைப்படம் பார்த்து கொண்டிருப்பார். இல்லை புத்தகம் படித்து கொண்டிருப்பார். இல்லையென்றால் எழுதி கொண்டிருப்பார்.

நிறைய படியுங்கள், உங்கள் செல்போனை சுவிட்ச் ஆப் செய்து விட்டு, உங்களை சுற்றி நடக்கும் விஷயங்களை கவனிக்க தொடங்குங்கள். நல்ல திரைப்படங்களை தேடி பார்த்து, அதன் திரைக்கதை யுக்திகளை கற்று கொள்ளுங்கள். wifi தேடி கண்டு பிடிக்கும் செல்போனை போல், நீங்கள் கேள்விப்படும் விஷயங்களில், சந்திக்கும் வித்தியாசமான மனிதர்களில் புதைந்து கிடைக்கும் கதைகள் கண்டு அறியுங்கள்...

எல்லோருக்கும் முதலமைச்சர் ஆகும் ஆசை இருப்பது போல், எல்லோரும் இயக்குனர் ஆக வேண்டும் என்ற ஆசையை பக்கத்தில் வைத்து விட்டு, முதலில் உங்களை நல்ல எழுத்தாளர்களாக தயார் படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் நினைத்து பார்க்காத கதவுகள் திறக்கும். ●

# காதலுக்கும் திருமணத்துக்கும் என்ன வித்தியாசம்



**மிகப் பெரிய ஞானியான தன் குருவிடம் ஒரு சீடன், காதலுக்கும் திருமணத்திற்கும் உள்ள வித்தியாசம் என்னவெனக் கேட்டான்.**

அதற்கு அந்த குரு, ''அது இருக்கட்டும். முதலில் நீ ரோஜாத் தோட்டத்துக்குப் போ. அங்கே உனக்கு எது உயரமான ரோஜாச் செடி என்று தோன்றுகிறதோ, அதை எடுத்துக் கொண்டு வா. ஆனால் ஒரு நிபந்தனை. நீ எக்காரணம் கொண்டும் போன வழியே திரும்பி வரக்கூடாது'' என்றார்.

கிளம்பிய சீடன் சிறிது நேரம் கழித்து வெறும் கையுடன் வந்தான். ஞானி, ''எங்கே உன்னைக் கவர்ந்த உயரமான செடி?'' என்று கேட்டார்.

சீடன் சொன்னான், 'குருவே, வயலில் இறங்கி நடந்த போது முதலில் உயரமான ஒரு செடி என்னைக் கவர்ந்தது. அதை விட உயரமான செடி இருக்கக் கூடும் என்று தொடர்ந்து நடந்தேன். இன்னும் உயரமான ரோஜாச் செடிகள் தென்பட்டன. அவற்றை விட உயரமான செடிகள் இருக்கக் கூடுமென மேலும் நடந்தேன்.

அதன் பிறகு தென்பட்டதெல்லாம் குட்டையான ரோஜாச் செடிகளே. வந்த வழியே திரும்ப வரக்கூடாது என்பதால் முன்னர் பார்த்த உயரமான செடியையும் கொண்டு வர முடியாமல் போய் விட்டது.

புன்முறுவலோடு ஞானி சொன்னார், ''இது தான் காதல்.''

பின்னர் ஞானி "சரி போகட்டும், அதோ அந்த வயலில் சென்று உன் கண்ணுக்கு அழகாகத் தெரிகின்ற ஒரு சூரிய காந்திச் செடியைப் பிடுங்கி வா. ஆனால் இப்போது கூடுதலாக ஒரு நிபந்தனை. ஒரு செடியைப் பிடுங்கிய பின் வேறு ஒரு செடியைப் பிடுங்கக் கூடாது'' சிறிது நேரத்தில் சீடன் ஒரு சூரிய காந்திச் செடியுடன் வந்தான் .

ஞானி கேட்டார் "இது தான் அந்தத் தோட்டத்திலேயே அழகான சூரிய காந்திச் செடியா?'' சீடன் சொன்னான், 'இல்லை குருவே, இதை விட அழகான செடிகள் இருக்கின்றன. ஆனால் முதல் முறை கோட்டை விட்டது போல் இந்த முறையும் விட்டு விடக் கூடாது என்ற அச்சத்தில் முகப்பிலேயே எனக்கு அழகாகத் தோன்றிய இந்த செடியைப் பிடுங்கி வந்து விட்டேன்.

நிபந்தனைப்படி, ஒரு செடியைப் பிடுங்கியபின் வேறு செடியைப் பிடுங்கக் கூடாது என்பதால் அதன் பிறகு இதை விட அழகான செடிகளை நான் பார்த்தபோதும் பறிக்கவில்லை.'

இப்போது ஞானி சொன்னார், ''இது தான் திருமணம்.''

# லட்சுமணனுக்கு ராவணனின் அறிவுரை



**ராமாயண போரின் இறுதி கட்டம்.**

போர்க்களம் எங்கும் இரத்த ஆறு பெருக்கெடுத்து ஓடுகிறது. போரில் தோல்வியடைந்த ராவணன் மரண அவஸ்தையில் மரண தேவதையின் வரவுக்காக காத்திருக்கிறான்.

இந்நிலையில் ஸ்ரீ ராமபிரான் தம்பி லட்சுமணனை கூப்பிடுகிறார். "என்ன வேலையாகக் கூப்பிட்டீர்கள் அண்ணா?...

"தம்பி..உனக்கு ஒரு முக்கியமான வேலை கொடுக்கிறேன். ராவணன் என்னதான் தப்பான காரியம் செய்திருந்தாலும் அவன் ஒரு சக்கரவர்த்தி, சிறந்த சிவபக்தன், பாடகன், தர்மங்களை நன்கு அறிந்தவன், நேர்மையாளன். அதனால் நீ அவனிடம் சென்று அவன் உயிர் பிரிவதற்குள் ஏதாவது நல்லதை கற்று கொண்டு வா! என்று சொல்லவும் தமையன் சொல் தவறாத தம்பியும் புறப்பட்டு சென்றான்.

ராவணன் தலைமாட்டுக்கருகில் நின்றான்

# எலி ஏன் தனியாக இருந்தது?



**எலி ஒன்று வைர வியாபாரி வீட்டிலிருந்து ஒரு வைரத்தை விழுங்கிவிட்டது.. மிகவும் விலை உயர்ந்த வைரம் அது. வியாபாரி எலி பிடிப்பவனை பார்த்து எப்படியாவது அந்த எலியை கொன்று, அதன் வயிற்றில் இருக்கும் வைரத்தை எடுக்க உதவ வேண்டும் என கேட்டு கொண்டார்.**

எலி பிடிப்பவனும் எலியை சுட்டுக் கொல்ல தன் துப்பாக்கியுடன் வந்துவிட்டான். அதை செய்ய.

எலி அங்கே இங்கே என்று போக்குக் காட்டி ஓடியதில், திடீரென்று ஆயிரக்கணக்கான சக எலிகள் ஒன்று கூடிவிட்டன. ஆயிரக்கணக்கான எலிகளுக்கு இடையேயும் அந்த வைரத்தை விழுங்கிய எலி மட்டும் அந்த எலி கூட்டத்தோடு சேராமல் "ஒதுங்கி தனித்தே" நின்றிருந்தது .

எலி பிடிப்பவனுக்கு அது வசதியாக போய்விட்டது. சரியாக குறி பார்த்து அந்த எலியை சுட்டான்.. எலி spot out.. வைர வியாபாரி சந்தோஷமாக அந்த எலியின் வயிற்றை கிழித்து வைரத்தை எடுத்து கொண்டான். எலி பிடிப்பவனை பார்த்து, வைர வியாபாரி ஒரு கேள்வி கேட்டான்.

"ஆமா...! அந்த எலி மாத்திரம் மற்ற எலிகளோடு சேராமல் தனியே தனித்தே இருந்ததே! நீயும் அதை சரியாக அடையாளம் கண்டு சுட்டுவிட்டாய். என்ன காரணம்? என்றான். அந்த எலி பிடிப்பவன் பதில் சொன்னான்...

இப்படித்தான்... 'பலபேர், திடீர் பணக்காரர்கள் ஆனதும் மற்றவர்களை விட நாம் உயர்ந்தவர் என்ற எண்ணம் கொண்டு மற்றவர்களுடன் தன்னை சேர்க்காமல், தூரத்தில் வைத்து கொள்வார்கள்" அதுவே. ஆபத்தில் அவர்களுக்கு உதவாமல் போய்விடுகிறது என்றான்.

உறவுகளும் அப்படித்தான் சிலர் இடையில் வந்து அழிந்து போகும் செல்வத்தை நம்பி கடவுள் கொடுத்த உறவுகளை அசட்டை செய்து விட்டு விடுகிறார்கள்.

ஆயிரம் கோடி செல்வம் இருந்தாளும் சொந்த பந்தமும் , நல்ல நட்புமுமே கடைசி வரையில் நம்முடன் இருக்கும்..

லட்சுமணன். காலடிஓசையைக் கேட்ட ராவணன், விழிகளைத் திறந்து பார்த்தான். ஒன்றும் பேசவில்லை. ஏதாவது சொல்லக்கூடும் என்று எதிர் பார்த்துக் காத்திருந்து. அலுத்துப்போன லட்சுமணன் ராமரிடம் வந்து முறையிட்டான்.

எல்லா விவரங்களையும் அறிந்து கொண்ட எம்பிரான் மெல்ல பொருள் பொதிந்த புன்னகையொன்றை வீசினார். "தம்பி...உபதேசம், அறிவுரை போன்றவை மகான்களிடம் இருந்து கேட்கும்போது அவர்கள் காலடி அருகில் நின்று கொண்டு கேட்பது தான் பண்பு. அதுதான் மரியாதை. நீயும் அதன்படியே நடந்து கொள்" என்று அறிவுரைக்கூறி அனுப்பினார்.

இந்தமுறை தன் கால்களுக்கு அருகில் நின்று கொண்டிருந்த லட்சுமணனை ஏமாற்றவில்லை ராவணன். வேதனையையும் மீறி அவன் முகத்தில் மலர்ந்தது ஒரு பாசப்புன்னகை.

"தம்பி லட்சுமணா... சிறிது என்னருகில் உன் காதைக்கொண்டு வா. எனக்கு தெரிந்த வாழ்க்கைக்கு முக்கியமான மூன்று விஷயங்களை பற்றிக் கூறுகிறேன்."



ஒன்று, Smart Phone வாங்காதே.

Smart boy என்று பேர் வாங்கு.

இரண்டு, Face Book-ஐ தப்பி தவறிக் கூட உபயோகப்படுத்தாதே.

உன் எதிரில் இருக்கும் மனிதர்களின் face தான் சிறந்த book.

மூன்று, கடைசியும் முக்கியமான ரகசியம் என்னவென்றால்... WhatsApp Group-ல் சேர்ந்து time waste பண்ணாதே, family கூட பொழுதை கழி...

# தமிழில் பேசுவது கேவலமா?
# சிக்கல்களை எதிர்கொள்கிறதா
# தமிழ்மொழி?

■ நிகரன்

யுனஸ்கோ வெளியிடும் அழிந்து வரும் மொழிகளின் பட்டியலில் தமிழ் இல்லை என்றாலும், எதிர்காலத்தில் அந்தப் பட்டியலில் இணையும் எல்லா விதமான தகுதியும் தமிழுக்கு இருக்கிறது என்பது, சமீபகால நடவடிக்கைகளில் இருந்து புரிய முடியும்.

உலகில் வழக்கத்தில் உள்ள மொழிகளில் 90 சதவீதம் வரை இந்நூற்றாண்டில் இல்லாமல் போய்விடும் என்று அச்சம் தெரிவிக்கப்படுகிறது. 11 நாட்களுக்கு ஒரு மொழி புழக்கத்தில் இருந்து அழிந்துவிடுகிறது. பிப்ரவரி 21ஆம் நாள் பன்னாட்டு தாய்மொழி தினமாக அறிவிக்கப்பட்டாலும், மொழிகளை பேணி காக்க வேண்டிய சிந்தனை உலகளவில் இல்லாமல் போய்விட்டது. உலகில் சராசரியாக 5,000 பேர் வரை ஒரு மொழியைப் பேசுவதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன. கிட்டத்தட்ட 4,000 மொழிகளைப் பேசுபவர்கள் ஆதிவாசிகள் எனக் கணக்கிடப் படுகிறது.

84 சதம் மொழிகள் ஒரே ஒரு நாட்டில் மட்டுமே பேசப்படு பவையாக உள்ளன எனக் கூறப்படுகிறது. இதில், ஏறக்குறைய 12 கோடிப் பேர் பேசும் மொழியாக நம் தாய்மொழி தமிழ் இருக்கிறது.

தமிழின் இன்றைய நிலைமை பார்ப்பதற்கு முன்னால், மற்ற மொழிகளின் இன்றைய நிலை குறித்தும் பார்த்தால், ஒப்பிடுவதற்கு சரியாக இருக்கும்.

அமெரிக்கா மற்றும் கனடாவில் பழங்குடி மக்களால் பேசப்படும் சுமார் 80 சதவீத மொழிகள் அவர்களுடைய குழந்தைகளுக்குச் சொல்லித் தரப்படுவதில்லை. இதனால் கனடாவில் 60 மொழிகள் பேசப்பட்டு, இன்றைக்கு 4 மொழிகளே நிலைத்து நிற்கின்றன. ஆஸ்திரேலியாவில் அங்குள்ள பழங்குடிகள் பேசிய 250 மொழிகள் மறைந்தே விட்டன என்று மொழியியல் அறிஞர் நெட்டல் கூறுகின்றார். தற்போது ஆஸ்திரேலியாவில் 250 மொழிகளில் இரண்டு மொழிகள் மட்டுமே பேசப்படுகின்றன.

ஆப்பிரிக்காவில் 54 மொழிகள் படிப்படியாக அழிந்துவிட்டன. 116 மொழிகள் மறையும் சூழலில் உள்ளன என்று மொழியியல் அறிஞர்கள் கவலை தெரிவித்துள்ளனர். பூர்வகுடி இன மக்கள் பேசுகின்ற மொழிகள்தான் படிப்படியாக அழிந்து வருகின்றன என்றும், நகர்ப்புற வளர்ச்சிகள், உலகமயமாக்கள் என்பது போன்றவை மொழிகளின் அழிவுக்கு காரணங்கள் என்று அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

மைசூரில் உள்ள இந்திய மொழியியல் கழகம் மொழிகள் அழிவது குறித்து தடுக்கக்கூடிய முயற்சிகள் எவை எவை என்று ஆய்வுகளை மேற்கொண்டுள்ளது. மொழிகளை பாதுகாப்பதன் மூலமாக ஒரு இனத்தின் கலாச்சாரம், பாரம்பரியம், பழக்க வழக்கங்கள் போன்றவற்றை பாதுகாக்க

முடியும்.

கேரளாவின் கொச்சியை சேர்ந்த வில்லியம் ரொசாரியோ கடந்த 2010ஆம் ஆண்டு ஆகஸ்ட் 20இல் மரணமடைந்தவுடன், அப்பகுதியில் பேசப்பட்ட மலையாள போர்ச்சுகீஸ் கிரியோல் என்ற மொழி மறைந்தது. 400 ஆண்டுகளாக கேரள கத்தோலிக்கர்களின் அடையாளமாக இந்த மொழி திகழ்ந்தது.

ரெமோ என்ற ஒடிசா மொழி போண்டா என்ற ஆதிவாசிகளால் பேசப்பட்டு, இந்த ஆதிவாசிகள் மக்கள் தொகை குறைந்து இம்மொழியும் அழிந்துவிடும். 20 இலட்சம் மக்கள் பேசும் கோந்தி மொழி சத்தீஸ்கர் மாநிலத்தில் எந்த பள்ளியிலும் பாட நூலாகவே இருக்கவில்லை. அதன்பின் மாவோயிஸ்ட்டுகளின் ஆதிக்கத்தினால், அந்த கோந்தி மொழியில் பாடப்புத்தகங்கள் அச்சடிக்கப்பட்டு, ஆரம்பப் பள்ளிகளில் பாடங்களாக கற்பிக்கப்படுகின்றன.

மதுரா, டெல்லி, ஆக்ரா போன்ற பகுதிகளில் பிரஜபாஷை பேசப்பட்டு வந்தது. பிரஜபாஷையோடு இந்தி மொழி கலந்து உருவானதுதான் கரிபோலி என்ற மொழியாகும். மேலும் டெல்லியிலும் அதனை சுற்றியுள்ள பகுதிகளிலும் கரிபோலியே இலக்கிய மொழியாக விளங்கியது.

பார்சி அரபு லிபியில் எழுதப்பட்ட காலத்தில், உருது என்கிற தேவநாகிரி லிபியில் எழுதப்பட்ட மொழி இந்தி என்று அழைக்கப்பட்டது. பெரும்பாலும் இந்தியர்கள் பார்சி மொழியைப் புறக்கணித்து இந்தி மொழியையே பயன்படுத்தினர். எனவே, வட இந்தியரின் மொழியாக இந்தியும், அரபி லிபியில் எழுதப்பட்ட உருது மொழி இஸ்லாமியர்களின் மொழியாகவும் விளங்கின.

இந்தியாவில் மற்ற மாநிலங்களில், அந்தந்த மொழிகளின் நிலைகள் இவ்வாறு இருக்க, தமிழும் தனக்கு தகுந்தாற் போன்று பல்வேறு பிரச்சனைகளை எதிர்க்கொண்டு வருகிறது.

இதை பள்ளியில் இருந்து வருவோம். தமிழகத்தில் அரசுப் பள்ளிகளின் எண்ணிக்கையை விட, தனியார் பள்ளிகளின் எண்ணிக்கை தான் பெரிய அளவில் உருவெடுத்து வருகின்றன.

குறிப்பாக, மாநகர, நகர பகுதிகளில் மட்டுமே இருந்த தனியார் பள்ளிகள் இப்போது, கிராமங்கள் வரை ஆழமாக தன் வேர்களைப் பதித்து வருகின்றன. ஆசார் என்ற தனியார் அமைப்பு மூலம் நடத்தப்பட்ட ஆய்வுகளில், தனியார் மற்றும் அரசு பள்ளிகளில் எட்டாம் வகுப்பு வரை படித்த மாணவர்களுக்கு பிழையின்றி தமிழ் எழுத தெரியாததும், எழுத்துக் கூட்டிப் படிக்கத் தெரியாததும் தெளிய வந்துள்ளது. இது போகப் போக சரியாகி



விடும் என்று எண்ணுவது தவறு. அதில் முக்கிய பிரச்சனை இது.

தமிழ்நாட்டிலேயே இந்த நிலை என்றால், அமெரிக்காவில்?

இன்றைய இளைஞர்கள் தமிழில் பேசுவதை கேவலமான விஷயமாக பார்க்கிறார்கள். உளவியல் அறிஞர்களின் ஆய்வு முடிவுகளின் படி, 'தாய்மொழியில் படிக்கிற குழந்தைகளுக்கே நல்ல கற்பனை சக்தியும் சிந்திக்கும் திறனும் உள்ளது' என்பது கண்டறியப்பட்டுள்ளது.

இன்றைய இளைய தலைமுறைகளுக்குத் தகுந்தாற் போன்று, தமிழில் எழுத்துச் சீர்திருத்தமும் கொண்டு வர வேண்டியது உடனடித் தேவை. தமிழின் மரபை உள்வாங்கிக் கொண்டு, நவீனத்தை பிரதிபலிக்கும் செயலாக இருக்க வேண்டும் அந்த சீர்திருத்தம். 26 எழுத்துக்களை வைத்துக் கொண்டு இங்கிலாந்துக்காரர்கள் உலகத்தையே ஆட்சி புரிந்தனர். 274 வார்த்தைகளை வைத்துள்ள தமிழர்கள், அடுத்த நிலைக்குச் செல்ல முடியாதா என்ன?

நம் எழுத்துக்களில் உள்ள அதிகப்படியான வார்த்தைகளால், இளைஞர்களுக்கு எளிதாக கையாள முடியவில்லை என்ற குற்றச்சாட்டு உண்டு. அதை எளிமைப்படுத்தும் பல்வேறு முயற்சிகளும் ஆங்காங்கு ஓரளவுக்கு நடந்து வருகிறது. அதை நாம் ஊக்கப்படுத்த வேண்டும். அப்போது பல மாற்றங்கள் ஏற்பட வாய்ப்புண்டு. இதை இன்றைய இளைஞர்களின் மனதில் ஆழப்பதிய வைக்க வேண்டும்.

தமிழகமோ, அமெரிக்காவோ இன்றைய இளைஞர்களே நாளைய பெற்றோர்கள் என்பதால், அவர்களே பின்னாளைய பிரச்சனைகளுக்கான இன்றைய தீர்வு.

இளைஞர்கள் நினைத்தால், லட்சம் ஆண்டுகள் கடந்தாலும், யுனஸ்கோ வெளியிடும் அழிந்து வரும் மொழிகளின் பட்டியலில் தமிழ் இருக்காது.

●



■ மகிழினி

# யூ டியூப் சமையல் : யூ டு புரூட்டஸ்




**உங்களுக்கு களி சாப்பிட ஆசை என்றால், அதை ஏன் தள்ளிப் போட வேண்டும்? யூ டியூப்பை பார்த்து உப்புமா செய்ய சொல்லுங்கள். களி தயாராகி விடும்.**

கசாயம் வேண்டுமா? ரசத்தை தயாரிக்கச் சொல்லுங்கள்.

பொங்கல் வேண்டுமா? இருக்கவே இருக்கிறது பிரியாணி ரெசிபி.

ஒரு பொருளுக்கு முற்றிலும் எதிர்தரப்பிலான பொருளை வழங்க முடிகிற சூட்சுமம், யூ டியூப்புக்கே உண்டு. சாம்பார், ரசம் மாதிரி இருக்கிறது; கறிக்குழம்பு, காரக்குழம்பு மாதிரி இருக்கிறது என வீட்டில் அன்றாடம் புலம்பாமல், உங்களுக்கு என்ன வேண்டுமோ அதற்கு எதிர்பதத்தில் ஒன்றை சொல்லி செய்து பார்க்கச் சொல்லுங்கள். நீங்கள் வேண்டியது அப்படியே உங்கள் நாக்குக்கு வரும்.

எதையும் பாசிட்டிவ்வா பாருங்க பாஸ்!

நவீன தொழில்நுட்பம் வழங்கிய, அற்புதப் படைப்புகளில், உன் குழாயும் உண்டு. உன் குழாயா? எங்கள் வீட்டில் அப்படி எந்த குழாயும் மாட்டவில்லையே என்று டரியலாகாதீர்கள். யூ டியூப்பின் தமிழாக்கம் தான் இது.

இந்தக் குழாய், நம் அறிவு தாகத்தை தீர்ப்பதற்கு உருவாக்கப்பட்டது எனினும், எதார்த்தத்தில் நடப்பதே வேறு. வடிவேலு சொன்னது மாதிரி, இது ரத்தபூமி; இந்த குழாயை திறந்தால் தண்ணீர் வராது; ரத்தம் தான் வரும். ஊர் உலகத்துக்கே ரத்தம் வரும் போது, தனிப்பட்ட குடும்பம் மட்டும் என்ன விதிவிலக்கா?

சமையல் அறையில், யூ டியூப் என்னென்ன சதிராட்டம் ஆடுகிறது என்பதை பார்ப்பதற்கு முன், இந்த யூ டியூப் என்னென்ன அநியாயங்கள் பண்ணுகிறது என்பதை முதலில் பார்த்து விடுவோம்.

எந்த கூச்ச நாச்சமும் இல்லாமல் பொய் சொல்லும் இடங்களில் ஒன்று, சமையலறை. அதுவும் யூ டியூப் சேனல்களில், சமையல் அறை பற்றி என்ன சொன்னாலும் பெண்கள் நம்பி விடுவர். ஊர்வன, பறப்பன, மிதப்பன என எல்லாவற்றுக்கும் இங்கு சமையல் குறிப்பு உண்டு.

நாய் கறி, உடம்புக்கு ஏன் நல்லது தெரியுமா என பாடம் எடுப்பார்கள். கேட்டால், ஜப்பானில் ஜாக்கிசான் பாம்பு கறி சாப்பிடுகிறார். அமெரிக்காவில் டொனால்ட் ட்ரம்ப் பன்றிக் கறி சாப்பிடுகிறார் என, நம் பொறுமையை பதம் பார்ப்பார்கள்.

போதாக் குறைக்கு, அதிக எடை போட்டு வருவதால், நமீதா நண்டு கறி சாப்பிட்டால் உடலுக்கு நல்லது என ஆரோக்கிய டிப்ஸ் வழங்குவர். இந்த விஷயம் நமீதாவுக்கு தெரியுமா? என்று கேட்டால், மவுனம் தான் பதிலாக வரும்.

எந்தெந்த உணவு நல்லது, எந்தெந்த உணவு கெட்டது என அவர்களே ஒரு சுய பதிவை போட்டு விடுவர். அதை மருத்துவர்களிடம் கேட்டால், அதை மறுத்து விட சொல்வார். உடல் ஆரோக்கியம் என்ற பெயரில் இவர்கள் இடும் வீடியோக்களை பார்த்தால், மறுநாளே மட்டையாகி விடுவோம்.

தினமும் கடுகும் பூண்டும் போட்டு வாயில் மெல்லுங்கள். காலையில் எழுந்தவுடன் கடலை மிட்டாய் சாப்பிடுங்கள். வட்ட டபராவில் வடிகட்டுங்கள் என மேலும் மேலும் கடுப்பேற்றுவார்கள். அவர்கள் தரும் ரெசிபியை செய்து பார்த்தால், கறிக் குழம்புக்கு பதிலாக காரக்குழம்பு தான் வரும். அந்த லட்சணத்தில் ரெசிபிக்கள் வடிவமைக்கப்பட்டிருக்கும்.

ஆனாலும் பாருங்க.. சுடுதண்ணி எப்படி வைப்பது, காய்கறிகளை எப்படி நறுக்குவது போன்ற குறிப்புகள் எல்லாம், யூ டியூப்பில் தெளிவாக குறிப்பிடப்பட்டிருக்கும். எந்த சந்தேகமும் வராமல்

அதை நீங்கள் பின்பற்றலாம்.

ஆனால், கபாப் செய்வது எப்படி? கடலை உருண்டைக்கு எத்தனை கிலோ கடலை போடுவது போன்ற குறிப்புகளை பார்த்து, காலை ஒடித்து கொண்டால், கம்பெனி பொறுப்பாகாது.

சில நேரம் சமைக்கத் தெரியாத மனைவியை, உறவினர்கள் முன்பு விட்டு கொடுக்க மனமில்லாமல், யூ டியூப் பார்த்து சமைக்கக் கற்றுக் கொண்டால் என பீலா விட்டு, விதவிதமான உணவுகளை கடையில் வாங்கி பாத்திரங்களில் நிரப்புங்கள். மானம் மிஞ்சும்.

விதவிதமான ஐட்டங்களை என் மனைவி கையால் தான் சாப்பிடுவேன். அவளுக்கு அது சமைக்க தெரியாவிட்டால், யூ டியூப்பை பார்த்து சமைக்க சொல்வேன் என்று வீராப்பு செய்தீர்கள் என்றால், விதி வலியது.

சரி, யூ டியூப்பை பார்த்து சமைத்த பிறகு, விளைவுகள் வராமலா இருக்கும். மனசை திடப்படுத்திக் கொள்ளுங்கள். வாழ்க்கை என்றால், சில அடிகள் விழத் தான் செய்யும். காக்கா பிரியாணி சாப்பிட்டால், காக்கா மாதிரி குரல் வராமல் உன்னி கிருஷ்ணன் மாதிரியா குரல் வரும்? கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள். அதற்கும் கைவசம் மருந்து உண்டு.

திரும்பவும் யூ டியூப்பில் மருத்துவமா என மிரளாதீர்கள். உங்களின் நோயை நீங்களே தீர்க்கலாம் என வழங்கப்படும் மருத்துவ டிப்ஸ்கள் தான், யூடியூப்பில் இருக்கும் பெரும் பிரச்சனை. ஈவு இரக்கமே இல்லாமல்



ஆலோசனை வழங்குவார்கள். பாம்பு கடித்து யாராவது இறந்து விட்டால், கொஞ்ச நேரம் உயிர் இருக்கும். அப்போது ஆலக்கட்டி மழை தண்ணீரை வாயில் ஊற்றினால் பிழைத்து விடுவார்.

வலிப்பு நோய் வருகிறவர்களுக்கு வாழைக்காய் பொறியல் வைத்துக் கொடுத்தால் சரியாகி விடும். கால்மேல் கால் போட்டு அமர்ந்தால் காய்ச்சல் வரும் என, ஆரோக்கிய ஆலோசனை என்ற பெயரில் அல்லையில் குத்துவார்கள்.

மூட்டு வலி வந்துவிட்டதா? கவலை வேண்டாம் முப்பது உக்கி போடுங்கள், மூளைக் காய்ச்சல் வந்தால், முன்னூறு பருத்தி வீரர்கள் படம் பார்த்தால் போதும் என பொடணியில் போடுவார்கள். அவர்கள் சொல்லும் ஆலோசனையை பின்பற்றினால் தினமும் வீட்டில் கொட்டுச் சத்தம் தான் கேட்கும்.

எங்க பாஸ் போறீங்க... திரும்பவும் யூ டியூப் பார்த்து சமைக்கப் போறீங்களா... அப்ப சரி, அப்ப சரி... ●

# இயற்கையின் குழந்தை, "கிராம்பு"

## கல்லீரல் காக்கும், தொண்டை நோய் நீக்கும்!



ஹூஸ்டன் மாமி

**வாசனையாலும் வசீகரத்தாலும் மருத்துவ கூறுகளாலும் பல்லாயிரம் ஆண்டுகளாக நமது நலன் காத்துவருவது இயற்கையின் குழந்தை, கிராம்பு என்றால் அது மிகையாகாது.**

நறுமணமூட்டிகளில் அதிகளவில் ஆன்டி ஆக்ஸிடன்ட்களை கொண்டது கிராம்பு. பல் வலிக்கு மிகச் சிறந்த மருந்து கிராம்பின் தைலம். பிரியாணியில் தொடங்கி, அடிப்படை இனிப்புகள் வரை கிராம்பு உபயோகப்படுத்தப்படுகிறது.

மயக்கம், வாந்தி, பேதி, வாய்வுக் கோளாறுகள், ஆசனவாய் எரிச்சல், தசைப்பிடிப்பு, காது நோய்கள், சரும நோய்கள் என பலவற்றை நீக்கும் திறன் கொண்டது கிராம்பு.

### உணவுக்கு மணம் சேர்க்க

ஒரு கிராம்பைத் தீயிட்டுக் கொளுத்தி, சமைத்து முடித்த உணவுகளில் மேலோட்ட மாகப் புதைத்து, ஒரு பாத்திரத்தைக் கொண்டு மூடிவிடுங்கள். 10 நிமிடங்களுக்கு பின், அந்த உணவின் மணமும் சுவையும் பல மடங்கு அதிகரித்திருக்கும்.

### சீரான செரிமானம் இருக்க

பொடித்த கிராம்பு, தோல் சீவிய சுக்கு தலா 50 கிராம், வறுத்த ஓமம், இந்துப்பு தலா 60 கிராம் எடுத்து ஒன்றாக கலக்க வேண்டும். அதில் ஒரு டீஸ்பூன் எடுத்து சாதத்தில் பிசைந்து சாப்பிட்டால், பசியை அதிகரிக்க செய்து முறையான செரிமானத்தை கொடுக்கும். விந்தின் தரத்தை மேம்படுத்த உதவும் சித்த மருந்துகளில் கிராம்பு சேர்க்கப்படுகிறது.

### கிராம்பு பற்பசை

நெல்லிக்காய், கடுக்காய், சீரகம் தலா 30 கிராம் சேர்த்து பொடியாக்கி, அதில் ஐந்து கிராம் கிராம்பு பொடி சேர்த்து பற்பொடியாக பயன்படுத்தலாம்.

### பித்தம் குறைய

விலாமிச்சை வேர், கிராம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி சேர்த்து தயாரிக்கப்படும் 'கிராம்பு வடகம்' மயக்கம், வாந்தி போன்ற பித்த நோய்களை குறைக்க உதவும்.

### தொண்டைப் புண் போக்கும்

தொண்டைப்புண் இருப்பவர்கள், ஒரு கிராம்பை எடுத்து லேசாக வதக்கி, தேனில் நனைத்து சுவைத்தால் உடனடியாக நிவாரணம் கிடைக்கும்.

### வாந்தி நிற்க, அலர்ஜி சரியாக

வாந்தி உணர்வு ஏற்படும்போது, ஒரு கிராம்பை எடுத்து வாயில் அடக்கி கொண்டால் பயன்தரும். கிராம்பு, புதினா, திருநீற்றுப் பச்சிலை, ஏலக்காய்யை நீர்விட்டு கொதிக்கவைத்து, அதன் வாசனையை முகர்ந்தால், உடலும் மனமும் உற்சாகமடையும். கிராம்புக்கு ஆன்டி-ஹிஸ்டமைன் செயல்பாடு இருப்பதால், அலர்ஜி சார்ந்த நோய்களுக்கும் பயனளிக்கும்.

### வயிற்றுப் புண் சரியாக

வயிற்று புண்களை உண்டாக்கும் ஹெலிகோபாக்டர் பைலோரி பாக்டீரியாவுக்கு எதிராக, கிராம்பில் உள்ள 'யுஜெனால்' எனும் நறுமண எண்ணெய் செயல்படுகிறது.

### கல்லீரலை பாதுகாக்கும்

கிராம்பு 'ஹெபடைடிஸ்' வைரஸ்களின் ஆதிக்கத்தை தடுத்து கல்லீரலுக்குப் பாதுகாப்பு அளிக்கும். கிராம்பை வாயில் அடக்கி கொண்டால், மது அருந்த வேண்டும் என்ற எண்ணம் குறையும்.

கிராம்பை நம் உணவுகளில் தொடர்ந்து சேர்த்து வந்தால், முதிர்ந்த வயதில் வரக்கூடிய பல நோய்கள் தடுக்கப்படும். கால்சியம், பாஸ்பரஸ், இரும்புச் சத்து, கரோட்டின், தயாமின் என நுண்ணூட்ட சத்துகளும் கிராம்பில் இருக்கின்றன. ●





# ஹெல்த் டிப்ஸ்

- வெண்டைக்காய் விதையை கொஞ்சம் பார்லி கஞ்சியில் போட்டு காய்ச்சி மூன்று நாள் வரை சாப்பிட்டு வந்தால் சிறுநீர் கழிக்கும்போது ஏற்படும் எரிச்சல் இல்லாமல் போகும்.
- உணவு சாப்பிடுவதற்கு அரை மணி நேரத்திற்கு முன், தினமும் அரை டீஸ்பூன் ஆலிவ் எண்ணைய்யை சாப்பிட்டு வந்தால், ரத்தக் குழாயில் கொழுப்பு படியாமல் தடுக்கலாம். இதனால் ஆயுள் அதிகரிக்கும்.
- வாய்ப்புண் உள்ளவர்களுக்கு காரம் என்றால் ஆகாது. அதனால், முடிந்த வரை காரத்தை குறைத்து சாப்பிடுங்கள். தேங்காய் துண்டுகளைச் சாப்பிட்டு வந்தால் வாய்ப்புண் எளிதில் ஆறும்.
- ஜாதிக்காயைச் சிறு சிறு துண்டுகளாகச் சீவி, அதை நெய்விட்டு வறுத்து சாப்பிட்டு வந்தால் சீதபேதி குணமாகும். இந்த பாதிப்பு உள்ளவர்கள் தயிர், மோர், இளநீர் ஆகியவற்றை அதிகம் உட்கொள்வது நல்லது.
- சிறிது தண்ணீரில் ஒரு கரண்டி ஓமம் போட்டு கொதிக்க வைத்து, அதில் 100 மில்லி தேங்காய் எண்ணெய்யை விட்டு மீண்டும் கொதிக்க விட்டு, வடிகட்டி கொள்ளுங்கள். வடிகட்டியதோடு கற்பூர பொடியை கலந்து இளஞ்சூட்டுடன் நன்றாகத் தேய்த்து வர உடம்பு வலி நீங்கும்.
- துளசி மனித மூளைக்கு வலிமையை கொடுக்கக்கூடியது. அதற்கு, துளசி இலையை ஒரு டம்ளரில் பறித்து போட்டு ஊற வைத்து, அந்த நீரை குடித்து வந்தால் மூளை பலம் பெறும்.
- தொண்டையில் புண், வலி ஏற்பட்டால் கொஞ்சம் சித்தரத்தை பொடியுடன் தேன் கலந்து சாப்பிடவும். தொண்டை புண் பாதிப்பு குணமான பிறகு, கொஞ்சம் மிளகை தூளாக இடித்து, அதில் வெல்லம், நெய் கலந்து உருட்டி விழுங்கி வந்தால் அந்த பாதிப்பு முற்றிலும் குணமாகும்.
- அஜீரணம் மற்றும் மந்தத்திற்கு சிறந்தது கொய்யாவின் கொழுந்து இலை. அதனை சாப்பிட்ட உடனேயே பலனை எதிர்பார்க்கலாம்.

## சருமம் காக்கும் கஸ்தூரி மஞ்சள்

**கஸ்தூரி மஞ்சள் சாதாரண மஞ்சளை விட சற்று மணம் அதிகமுள்ளது. தோல் நோய்களை போக்கும் தன்மையை பெற்றது. அடிபட்ட வலிகளுக்கும், மூக்கில் வரும் நோய்களுக்கும், குன்ம வயிற்று வலிக்கும், கட்டிகள் உடையவும், தேமலை போக்கவும் கஸ்தூரி மஞ்சள் பயன்படுகிறது.**

- இளம் பெண்களில் சிலருக்கு முகத்தில் ஆண்களை போல மேலுதட்டின் மீது முடி வளர்வதுண்டு. இதைப் போக்க கஸ்தூரி மஞ்சளை பொடித்து அல்லது குழைத்து முகத்தில் பூசிக் கழுவி வந்தால், முடி வளர்வது தடைப்படும். முகத்தில் பொலிவு ஏற்படும்.
- பெண்கள் கஸ்தூரி மஞ்சள் கிழங்கை பொடித்து, உடல் முழுவதும் பூசி, சற்று நேரம் கழித்து குளித்தால் தோல் நோய்கள் நீங்கும். கரப்பான் புண்கள் விரைவில் குணமாகும்.
- ஆண்கள் கஸ்தூரி மஞ்சளை முகத்தில் பூசக் கூடாது. முடி வளருவது அங்கங்கு தடைப்படும்.
- கஸ்தூரி மஞ்சளை இடித்துத் தூள் செய்து துணியில் சலித்து எடுக்க வேண்டும். இதில் ஐந்து குன்றிமணி அளவு தேனில் கலந்து சாப்பிட்டால் குன்ம நோய்கள் மற்றும் வயிற்று வலி ஆகியவை குணமாகும்.
- கஸ்தூரி மஞ்சளை வெங்காய சாற்றில் குழைத்து கட்டிகள் மீது பூசினால் கட்டிகள் உடையும்.
- கஸ்தூரி மஞ்சளை அரைத்து சூடு படுத்தி அடிபட்ட இடத்தில் தடவினாலும், கட்டினாலும் வீக்கமும் வலியும் குறையும்.
- கஸ்தூரி மஞ்சள் தூளை, தேங்காய் எண்ணெய்யில் கலந்து அடிபட்ட புண் அல்லது சிரங்குகளுக்கு மேல் பூசினால் விரைவில் குணமாகும்.
- சாதாரண மஞ்சள்களுக்கு பதிலாக, பெண்கள் கஸ்தூரி மஞ்சளை இடித்து தூளாக்கியோ கல்லில் அரைத்தோ முகத்திற்கு பூசி வந்தால், முகத்தில் பொலிவு ஏற்படும். முகப் பருக்கள், தேமல்கள் ஆகியவை வராமல் தடுக்கும்.

# மஞ்சள் காமாலையை தடுக்கும் முள்ளங்கி



அன்றாட சமையலுக்கு பயன்படுத்தப்படும் காய் வகையை சேர்ந்த முள்ளங்கியில் மருத்துவ குணங்கள் ஏராளம் உண்டு. உணவாக மட்டுமின்றி, முள்ளங்கி மருந்தாகவும் பயன்படுகிறது. இதில் உள்ள சத்துக்கள் ஆண்களின் உயிரணுக்களை அதிகரிக்க செய்கின்றன. உடலில் உள்ள நச்சுகளை வெளியேற்றி மஞ்சள் காமாலை வராமல் பாதுகாக்கிறது. புற்றுநோய் வராமல் தடுக்கிறது.

முள்ளங்கியில் வைட்டமின் - சி உள்ளிட்ட மேலும் பல சத்துகள் அதிகம் உள்ளன. முள்ளங்கி இலைகளும் மருத்துவ மகத்துவம் கொண்டவை. கல்லீரலை பாதுகாக்கின்றன. தொடர்ந்து பயன்படுத்தும்போது, சர்க்கரை நோயை கட்டுக்குள் வைக்கும் திறன் கொண்டவை.



முள்ளங்கியை துருவி, அதை பிழிந்து சாறு எடுத்து, அருந்திவர உடலில் உள்ள பெரும்பாலான பிரச்சனைகள் நீங்கும். மஞ்சள் காமாலையில் இருந்து முள்ளங்கி பாதுகாப்பளிக்கிறது. சமையலில் சேர்த்தும் இதனை எடுத்துக்கொள்ளலாம்.

முள்ளங்கி, நச்சுக்களை வெளியேற்றி ஈரலை பலப்படுத்தும். பசியை தூண்டும். ரத்தம் மற்றும் ஜீரணப் பாதையை சுத்தப்படுத்துகிறது. மலச்சிக்கலை போக்குகிறது. மஞ்சள் காமாலை வராமல் பாதுகாக்கிறது. மாதவிலக்கு பிரச்சனைகளை போக்குகிறது.

முள்ளங்கி அல்சருக்கும் அருமருந்தாக உள்ளது. முள்ளங்கியை துருவி பிழிந்து, 50 முதல் 100 மில்லி அளவுக்கு சாறு எடுத்துக் கொள்ளவும். இதனுடன் கெட்டி தயிர், உப்பு சேர்த்து வெறும் வயிற்றில் காலையில் குடித்துவர அல்சர், மூலம், வெள்ளை போக்கு பிரச்சனைகள் சரியாகும். சிறுநீர் கற்களை கரைத்து வெளியேற்றும். சிறுநீர் கழிக்கும்போது ஏற்படும் எரிச்சலை போக்கும். ஆண்களின் உயிரணுக்களை அதிகரிக்க செய்யும்.

## கற்றாழை தயிர் சாதம்

### அல்சர் பிரச்சனைக்கு மிகவும் நல்லது

**என்னென்ன தேவை?**

சாதம் - 1 கப்

புளிக்காத தயிர் - 1 குழிக்கரண்டி

காய்ச்சிய பால் - 2 குழிக்கரண்டி

வெண்ணெய் - 2 டீஸ்பூன்

கற்றாழை - 1 துண்டு

மாதுளை, திராட்சை, உப்பு - தேவையான அளவு

தாளிக்க:

நல்லெண்ணெய் - 1 டீஸ்பூன்

கடுகு, உளுந்து - 1 டீஸ்பூன்

இஞ்சித் துருவல் - சிறிதளவு

பச்சை மிளகாய் - 1

கறிவேப்பிலை, மல்லித் தழை - சிறிதளவு

எப்படிச் செய்வது?

கற்றாழையைத் தோல் சீவி நன்றாக அலசிக் கொள்ளுங்கள். தயிருடன் கற்றாழையைச் சேர்த்து, மிக்சியில் அரைத்துக் கொள்ளுங்கள். சூடான சாதத்தை நன்றாக மசித்துக் கொள்ளுங்கள். அரைத்த கற்றாழை, பால், வெண்ணெய், உப்பு ஆகியவற்றைக் குழைத்த சாதத்துடன் சேர்த்து மசித்துக்கொள்ளுங்கள்.

தேவைப்பட்டால் சிறிது பால் சேர்த்துக் கொள்ளுங்கள். பின் தாளித்துக் கொட்டிக் கிளறி, உப்பு சரி பார்த்து, பழங்களைச் சேர்த்துப் பரிமாறுங்கள். இது உடம்பு சூட்டைத் தணிக்கும்; எளிதில் செரிமனமாகும்.





# உடலுக்கு மட்டுமல்ல, சருமத்துக்கும் உகந்தது கொத்தமல்லி

அன்றாட சமையலில் நாம் பயன்படுத்தும் ஓர் மூலிகை தான் கொத்தமல்லி. இந்த கொத்தமல்லியில் உணவில் நல்ல மனத்தை கொடுப்பது மட்டுமின்றி, பல பிரச்சனைகளை குணப்படுத்தும் ஏராளமான சத்துக்கள் நிறைந்துள்ளன.

**மென்மையான சருமத்திற்கு!**

4 டீஸ்பூன் ஓட்ஸ், 2 டீஸ்பூன் பால், 2 டீஸ்பூன் வெள்ளரிக்காய் சாறு மற்றும் சிறிது கொத்தமல்லி சாற்றினை சேர்த்து நன்கு கலந்து, முகத்தில் தடவி 15 நிமிடம் ஊற வைத்து, பின் குளிர்ந்த நீரில் கழுவினால், சருமம் மென்மையான பட்டுப் போல ஆகிவிடும்.

**முகப்பருவைப் போக்க!**

உங்களுக்கு முகப்பரு தொல்லை இருந்தால், ஒரு கப் நீரில் கொத்தமல்லி, சிறிது சீமைச் சாமந்தி பூ அல்லது எண்ணெய் மற்றும் சிறிது லெமன்கிராஸ் சேர்த்து கொதிக்க வைத்து இறக்கி, பின் குளிர வைத்து, வடிகட்டி அந்த பொருட்களை அரைத்து முகத்தில் தடவி, சிறிது நேரம் ஊற வைத்து குளிர்ந்த நீரில் கழுவ, முகப்பரு மறைந்தே விடும்.

**கரும் புள்ளிகள் நீங்க!**

மூக்கைச் சுற்றி கரும்புள்ளிகள் இருந்தால், 1 டீஸ்பூன் கொத்தமல்லி சாறு மற்றும் 1 டீஸ்பூன் எலுமிச்சை சாறு சேர்த்து கலந்து, பாதிக்கப்பட்ட பகுதியில் தடவி 1/2 மணிநேரம் ஊற வைத்து, குளிர்ந்த நீரில் கழுவ, கரும்புள்ளிகள் அகலும்.

**சிவப்பு தடிப்புகள் மறைய!**

சிலருக்கு முகத்தில் சிவப்பு நிற தடிப்புக்கள் ஏற்படும். இந்த பிரச்சனையில் இருந்து விடுபட, 2 டீஸ்பூன் கொத்தமல்லி சாறு, 2 டீஸ்பூன் தக்காளி சாறு மற்றும் சிறிது பன்னீர் (ரோஸ் வாட்டர்) சேர்த்து கலந்து, முகத்தில் தடவி 20 நிமிடம் உற வைத்து, பின் குளிர்ந்த நீரில் கழுவுங்கள். இதனால் நல்ல மாற்றத்தை நீங்களே காண்பீர்கள்.

**முடி உதிர்தலை கட்டுப்படுத்த!**

முடி உதிர்தலைக் கட்டுப்படுத்த கொத்தமல்லி பெரிதும் உதவியாக இருக்கும். மேலும், கொத்தமல்லியில் உள்ள வைட்டமின்கள் மற்றும் புரோட்டீன்கள், முடியின் வளர்ச்சியைத் தூண்டும்.

எனவே, கொத்தமல்லி சாற்றினை எடுத்து, தலையில் ஸ்கால்ப்பில் நன்கு படும்படி தடவி 1 மணிநேரம் ஊற வைத்து, பின் தலையை வெதுவெதுப்பான நீரில் அலச வேண்டும். இப்படி வாரம் ஒருமுறை செய்து வந்தால், முடி உதிர்வது குறைந்து, முடியின் வளர்ச்சி தூண்டப்படும்.

**சிவந்த உதடுகளுக்கு!**

தினமும் இரவில் படுக்கும்முன், கொத்தமல்லி இலை சாற்றினை உதட்டில் தடவிக் கொள்ளுங்கள். இன்னும் சிறப்பான பலனைக் காண, அத்துடன் சிறிது எலுமிச்சை சாற்றினையும் கலந்து பயன்படுத்துங்கள். இப்படி செய்தால், கருப்பாக, பொலிவிழந்த உங்கள் உதடுகள் சிவந்த நிறத்தில் மாறும்.

**முகம் பளிச்சிட!**

சிறிது கொத்தமல்லி இலைகள், தயிர் மற்றும் கற்றாழை ஜெல்லை சரிசமமாக எடுத்துக் கொண்டு நன்கு அடித்து, பின் அதில் 1 டீஸ்பூன் அரிசி மாவு சேர்த்து கலந்து, முகத்தில் தடவி 15 நிமிடம் ஊற வைத்து, பின் வெதுவெதுப்பான நீரில் கழுவ, சருமம் மென்மையாகவும், பொலிவுடனும் இருக்கும்.

•

# பேசும் ரேகைகள்

7



■ ராஜேஷ் குமார்

**விவேக் மதிய உணவை முடித்துக் கொண்டு வாழைப்பழத்தை உரித்துக் கொண்டிருந்த போது ரூபலா அந்தக் கேள்வியைக் கேட்டாள்.**

"என்னங்க.. உலகத்துல ஒருத்தருக்கு இருக்கிற கட்டை விரல் ரேகையைப் போலவே இன்னொருத்தருக்கும் இருக்காதுன்னு சொன்னது எந்த அளவுக்கு உண்மை..?

"உண்மையோ உண்மை.."

"அது எப்படிங்க... உலகத்தோட ஜனத்தொகை இன்றைய நிலவரப்படி கிட்டத்தட்ட 800 கோடி. இந்த 800 கோடி மக்களின் கட்டைவிரல் கைரேகைகள் ஒரேமாதிரி இருக்காதுன்னு சொல்லப்படுவதற்கு என்ன ஆதாரம் இருக்கு."

"ஒரே ஒரு ஆதாரம்தான்.."

"என்ன..?"

"இதுவரைக்கும் உலகத்தில் பிடிபட்ட குற்றவாளிகளின் கைரேகைகளை பதிவு செய்து வைத்துள்ள இண்டர்நேஷனல் ஃபிஸ்கர் பிரின்டிங் சர்வீசஸ் ஆய்வு செய்து கொடுத்த அறிக்கைதான் ஆதாரம். யாருக்குமே ஒரே மாதிரியான கட்டை விரல் ரேகைப்பதிவு இல்லவேயில்லைன்னு அந்த அறிக்கை சத்தியம் பண்ணாத குறைதான்.."




"நம்பறதுக்கு கஷ்டமாயிருக்கு.."

"ஆனா அதுதான் உண்மை."

"கொலை நடந்த இடத்துல கிடச்ச கைரேகைப் பதிவுகளை வெச்சுகிட்டு ஒரு கொலையாளியைக் கண்டுபிடிக்க முடியும் என்கிற உண்மையை எந்த வருஷம், எந்த நாட்ல, யார் கண்டு பிடிச்சாங்க..?"

"சொன்னா உனக்கு ஆச்சர்யமாய் இருக்கும் ரூபி. கைரேகைப் பதிவு மூலம் குற்றவாளிகளை கண்டுபிடிக்கும் நுட்பத்தை கண்டு பிடித்தவரின் பெயர் எட்வர்ட் ஹென்றி. இவர் இந்தியாவைச் சேர்ந்த காவல்துறை அதிகாரி. 1890ம் ஆண்டு வங்காளத்தில் அவர் பணிபுரிந்தார். அதற்குப் பிறகு 1901ம் ஆண்டில் ஸ்காட்லாண்ட் யார்டில் குற்ற விசாரணைப் பிரிவின் அதிகாரியாக நியமிக்கப்பட்டார்."

"அப்படீன்னா இந்த கைரேகையின் மூலம் புலனாய்வு என்கிற முறை நம்ம நாட்டில் இருந்துதான் ஆரம்பமாயிருக்கு..?"

"ஆமா.."

"இருங்க.. ஒரு ரெண்டு நிமிஷம் பெருமைப் பட்டுக்கிறேன்" என்று சொன்ன ரூபலா, இடுப்பில் தன் இரண்டு கைகளையும் வைத்துக் கொண்டு போஸ் கொடுத்துவிட்டு விவேக்கைப் பார்த்தாள்.

"என்னங்க.. எனக்கொரு சந்தேகம்.."

"என்ன?"

"குற்றம் நடந்த இடத்தில் எத்தனை மணி நேரம் வரைக்கும் குற்றவாளியின் கைரேகைப்பதிவு அழியாமல் இருக்கும்.."

“எந்த ஒரு குற்றம் நடந்தாலும் சரி, சம்பவம் நடந்த ரெண்டுமணி நேரத்துக்குள்ள கைரேகைப் பதிவுகளை எடுத்தால்தான் தெளிவாக கிடைக்கும். ஈரப்பதம் காய்ந்து விட்டால் அதாவது MOISTURE இல்லாவிட்டால் ரேகைகள் தெளிவாக இருக்காது. அதுவும் இல்லாமே ஒரு இடத்துல எந்த மாதிரியான குற்றம் நடந்து இருந்தாலும் சரி, அது கொலையோ இல்லை திருட்டோ முதலில் அந்த அறைக்குள்ளே நுழையறவங்க ஃபிங்கர் பிரின்ட்ஸ் எடுக்கிற நிபுணர்களாகத்தான் இருக்கணும்.”

“இப்ப உருவாகிற குற்றவாளிகள் எல்லாருமே அதிபுத்திசாலிகளாய் இருக்காங்க. ஏதாவது ஒரு குற்றத்தை செய்ய போகும்போது, கைகளுக்கு உறைகளை மாட்டிக்கறாங்க. அது மாதிரியான சமயங்களில் கைரேகைப் பதிவுகள் எப்படி கிடைக்கும்-?”

“கிடைக்கும்.”

“அதுதான் எப்படின்னு கேட்கிறேன்..?”

“குற்றவாளிகள் எவ்வளவு புத்திசாலித்தனமாய் செயல்பட்டாலும் அவர்களையும் அறியாமல் ஒரு சின்ன துண்டு ரேகையாவது விட்டுவிட்டு போய் விடுவார்கள். இப்படி அவர்களையும் அறியாமல் விட்டுவிட்டு போகிற கைரேகையை போலீசார் (BURGLAR,S VISITING CARD) பர்க்கலர்ஸ் விசிட்டிங் கார்டு என்று சொல்கிறார்கள். அப்படியும் கைரேகைப் பதிவுகள் கிடைக்காவிட்டால் குற்றவாளிகளின் கால்பதிவுகள் (FOOT PRINTS) கண்டிப்பாக கிடைக்கும்”.

“ஒருவன் குற்றவாளி என்று உறுதி செய்ய ரேகைப் பதிவுகளை எந்த மாதிரியான முறையில் சோதித்துப் பார்ப்பார்கள்.”

“குற்றம் நடந்த இடத்தில் இருந்து சேகரிக்கப்பட்ட ரேகைகளை குற்றவாளி என்று சந்தேகப்படும் ஒரு நபரின் கைரேகைகளோடு ஒப்பிட்டுப் பார்த்து குற்றவாளி என்று முடிவு செய்ய எட்டு பாயின்ட்கள் தேவைப்படும். வளைவான ரேகைப் பதிவு கிடைத்தால் அந்த வளைவின் கோணத்தை (ANGLE) அளப்பது மிக முக்கியமான பணிகளில் ஒன்றாகும். இது நிதானமாய் செய்ய வேண்டிய வேலை என்பதால் இந்தத் துறையில் எழுபது சதவீதம் பேர் பெண்கள் பணியாளர்களாக இருக்கிறார்கள்.

ரூபலா இப்போது குறுக்கிட்டுக் கேட்டாள்.

“குற்றம் நடந்த இடத்தில் எங்கெல்லாம் கைரேகைகள் இருக்கும் என்று ஃபாரன்ஸிக் நிபுணர்களுக்குத் தெரியும்?”



“அனுபவம் வாய்ந்த ஃபாரன்ஸிக் நிபுணர்களுக்கு சாதாரண கண்களுக்கே (NAKED EYES) கைரேகைகள் இருக்குமிடம் தெரியும். உடனே அதன் மேல் பவுடர் தூவி போட்டோ எடுப்பார்கள்.

பவுடர்ன்னா, எது மாதிரியான பவுடர்?”

“அது ஒரு வகையான ஒளிரும்தன்மை கொண்ட “டைட்டானியம் ஆக்ஸைட் என்று அழைக்கப்படுகிற ரசாயனப் பவுடர்.”

“துணிகளை ஒரு குற்றவாளி தொட்டிருந்தா அந்தத் துணிகள் மேலேயும் கைரேகைப் பதிவுகள் இருக்குமா?”

“இருக்கும்.”

“அதை எப்படி எடுப்பாங்க..”

“அது மாதிரியான கைரேகைகளை பதிவு செய்ய சில்வர் நைட்ரேட் முறை இருக்கு. அதே மாதிரி கொலை செய்யப்பட்ட ஒரு நபரின் மேல் இருக்கிற கைரேகைப் பதிவுகளை எடுக்க லேசர் பீம் (LASER BEAM) மெதட் இருக்கு..!

“எனக்கு இன்னொரு சந்தேகம்?”

“என்ன?”

“குற்றவாளிகளின் ரேகைகள் மீது வீட்டில் உள்ளவர்களின் ரேகைகள் தெரியாமல் படிந்து விட வாய்ப்பு இருக்கா இல்லையா?”

“நிறையவே வாய்ப்பு இருக்கு. உதாரணத்திற்கு ஒரு குற்றச்சம்பவம் நடந்த இடத்தில் அந்த வீட்டைச் சேர்ந்தவர்கள் பதற்றத்தோடு செயல்படும்போது அவர்களுடைய கைரேகைப் பதிவுகள் ஏற்கனவே படிந்து இருக்கும் குற்றவாளிகளின் கைரேகைகளின் மேல் பதிய வாய்ப்பு இருக்கு.




இதை ஃபாரன்னிக் பீப்பின் ஒவர் லேப்பிங் (OVER LAPPING) என்று சொல்வார்கள். அப்படி ‘ஓவர் லேப்பிங் இருந்தாலும்கூட, குற்றவாளியின் ரேகையின் ஒரே ஒரு சிறு பகுதி வெளியே தெரிந்தாலும் கூட, அதை வைத்துக் கொண்டு ரேகைகளை இனம் பிரித்து

விடுவார்கள். இனம் பிரித்தபின் வீட்டில் உள்ளவர்கள் ரேகைகளை எல்லாம் கண்டுபிடித்து எலிமினேட் (ELIMINATE) செய்துவிடுவார்கள்."

"ரத்தத்தில் கைரேகைகள் இருந்தால் அதை எப்படி கண்டுபிடிப்பார்கள்?"

"அதை போட்டோ எடுத்துப் பார்த்தாலே ரேகைகள் எளிதாக பார்வைக்குத் தட்டுப்பட்டுவிடும். இப்போது கைரேகைப் பதிவுகளைக் கண்டு பிடிக்க ஒரு வெளிநாட்டுக் கண்டுபிடிப்பு வந்துள்ளது."

"அது எது மாதிரியான கண்டுபிடிப்பு?"

"அது ஒரு நவீன கருவி. பெயர் ப்யூமிங் கிட் பாக்ஸ் (FUMING KIT BOX). இந்த கருவியில் உள்ள ரசாயனப் புகையை குற்றம் நடந்த இடத்தில் நிறுத்திவிட்டு, அரை மணி நேரம் கழித்து அரிசியைத் திறந்துப் பார்த்தால், அந்த அறையின் எந்த மூலை முடுக்கில் குற்றவாளிகளின் கைரேகைகள் பதிந்து இருந்தாலும் அத்தனைப் பதிவுகளும் துல்லியமாய் தெரியும்."

"நம் நாட்டில் இந்த கைரேகைப் பதிவுத் துறை மேம்படுத்தப்பட்டு இருக்கா.?"

"இந்தத் துறையை நவீனப்படுத்த மத்திய அரசு ஆண்டு தோறும் 100 கோடி ரூபாய்க்கும் மேல் நிதி ஒதுக்குகிறது. ஒவ்வொரு வருடமும் 1500 ஃபிஸ்கர் பிரின்ட் கிம் பாக்ஸ்கள் நாட்டில் உள்ள எல்லா காவல் நிலையங்களுக்கும் அனுப்பப்படுகின்றன. ஆரம்பத்தில் கைரேகைப் பிரிவு டெக்னிகல் சர்வீஸ் ஐ.ஜி.யின் கட்டுப்பாட்டில் இருந்தது.

அதன் பிறகு சி.பி.சி.ஐ.டி. தலையின் கட்டுப்பாட்டில் இயங்கியது. இப்போது மாநில குற்ற ஆவணக்காப்பகத்தின் கீழ் இயங்குகிறது. இந்த ஒட்டு மொத்த அமைப்புக்குப் பெயர் 'சிங்கிள் டிஜிட் (SINGLE DIGIT) இந்த சிங்கிள் டிஜிட் அமைப்புத்தான் போலீஸ் துறைக்கு முதுகெலும்பாக இருந்து பல்வேறு வகைகளில் உதவி செய்கிறது.

குற்றம் நடந்த இடத்தில் ஒரு கைரேகைப் பதிவு கிடைத்தால் அதை உள்ளூர் மையத்தில் சரிபார்த்துவிட்டு, ரேகை ஒத்துப்போகவில்லையென்றால் வெளியூர் மையப் பிரிவுகளுக்கு அனுப்புவார்கள். இந்த 'சிங்கிள் டிஜிட் அமைப்பில் மொத்தம் 26 பிரிவுகள் இருப்பதால், ஏதாவது ஒரு பிரிவில் குற்றவாளி மாட்டிக் கொள்வான்."

"வேற வழி..?" விவேக் சிரித்துவிட்டு





தொடர்ந்தான் 1895ம் வருடம் சென்னை ஐ.ஜி. அலுவலகத்தில் இரண்டு இன்ஸ்பெக்டர்களோடு ஆரம்பிக்கப்பட்ட கைரேகைப் பதிவு இன்று ஆண்டு தோறும் 1500 குற்றவாளிகளை அடையாளம் காட்டிக் கொண்டு இருக்கிறது. இதன் மூலம் காவல் துறை குற்றவாளிகளின் மேல் உரிய நடவடிக்கை எடுத்து நீதிமன்றத்தில் நிறுத்தி தண்டனைகளைப் பெற்றுத் தருகிறது.

இன்று இந்த 'சிங்கிள் டிஜிட் அமைப்பிடம் பத்து லட்சத்துக்கும் மேற்பட்ட குற்றவாளிகளின் கைரேகைகள் உள்ளன. இந்த கைரேகைகள் அதி நவீன கம்ப்யூட்டர்களில் பதிவு செய்யப்பட்டு உரிய முறையில் பாதுகாக்கப்படுகிறது.

"நீங்க ஒவ்வொரு விஷயத்தையும் சொல்லச் சொல்ல எனக்கு பிரமிப்பாய் இருக்கு.. எனக்கு இன்னும் ஒரே ஒரு சந்தேகம்."

"என்ன.. கேட்டுடு..! இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே நான் கமிஷனருக்கு முன்னாடி இருக்கணும்.. அவர் வரச் சொல்லியிருக்கார்."

"1895ம் வருஷத்துக்கு முன்னாடி, அதாவது கைரேகைப் பிரிவு தொடங்கப்படுவதற்கு முன்பு எந்த முறையை அடிப்படையாய் வைத்து போலீசார் குற்றவாளிகளைக் கண்டு பிடித்து வந்தார்கள்.?"

"கடைசியாய் நீ இப்ப ஒரு கேள்வி கேட்டியே.. இதுதான் நல்ல கேள்வி. 1895 வருஷத்துக்கு முன்பு 'ஆன்க்ரோ பாமிஸ்ட்ரிக் என்கிற முறையில் குற்றவாளிகளைக் கண்டுபிடித்து வந்தார்கள். அதாவது குற்றவாளியின் முக நீளம், தோள் அளவு, கைவிரல்களின் நீளம் போன்ற இந்த அளவுகள் எல்லாம் குற்றம் நடந்த இடத்தில் கிடைத்த தடயங்களோடு ஒத்துப் போகிறதா என்று சரி பார்ப்பதுதான் அந்த்ரோ பாமிஸ்ட்ரி (ANTHRO PALMISTRY) முறை."

"எதிர்காலத்துல இந்தத்துறையில் எதுமாதிரியான முன்னேற்றம் இருக்கும்ன்னு நினைக்கறீங்க?"

"ஒரு குற்றவாளியின் ரேகையை கம்ப்யூட்டருக்குக் கொடுத்தா அது குற்றவாளியின் உருவத்தை அப்படியே வரைஞ்சு கொடுக்கும்."

"உண்மையா?"

"ஆமா.. அதுக்கு இன்னும் முப்பது வருஷமாகும்." ●

# SRIMATHA CANCER CARE

(Secular Charitable Institution in support of indigent Terminally ill and Renal Failure patients)
Admn.Office No.466, 3rd Avenue, Indira Nagar, Chennai - 600 020.
Tel : 24421165, 24912308, 24413233 Email: dvijayasree.smcc@rediffmail.com
www.srimathacancercare.com



Founder & Managing Trustee
Dr.Hon.D.VIJAYASREE MAHADEVAN
The Doctor of Cancer Care Service
91762 08165



புற்றுநோய் முற்றி விட, இனி சிகிச்சை பலன் தராது என்று மருத்துவர் கூறிவிட, வாழ்வதற்கு சிறிது காலம் தான் உள்ளது என்கிற நிலையில் இந்த நோயாளிகளுக்கு தேவை வலிதீர்க்கும் மருத்துவ சேவைகள், தூய்மையான காற்றோட்டமான சூழ்நிலை, ஆரோக்கியமான உணவு, நம்பிக்கையூட்டும் வார்த்தைகள், ஆதரவும் கனிவும் நிறைந்த அரவணைப்பு.

இவை அனைத்தும் அளித்து, உடலை வாட்டும் வலி, ரணங்கள், மனதை வாட்டும் மரணபயம் மற்றும் தனிமையை போக்கி உதவிகரம் நீட்டி வருகிறது சென்னை இந்திரா நகரில் வாடகைக் கட்டிடத்தில் அமைந்துள்ள ஸ்ரீ மாதா கேன்சர் கேர்.

## Donor's Feed Back

இறுதி நிலை புற்றுநோயால் அவதிப்படுபவர்களுக்கு ஆறுதல், அடைக்கலம் மற்றும் பராமரிப்பு தரும் உங்கள் அனைவரையும் கண்டு மனம் நெகிழ்கிறேன். இறையருள் இங்கு இருக்கின்ற சக்தியை உணர்கிறேன். இத்தகைய "Angels on Earth" புண்ணிய ஆத்மாக்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

– திருமதி. வித்யா குமார், *Melbourne, Australia*

*It is my fortune to visit this temple of smile. Time spent with Vijayasree Mahadhevan is worth millions. God bless everyone connected with this noble project.*

**L.N.M.S. Venkateswaran , Chennai.**

*We visited for a corporate donation - The facility and treatment are neat and genuine to the needy.*

**R. Kowsalya, Athena Health, Perungudi.**

இறைவன் அருளால் துரைப்பாக்கத்தில் நடக்கும் சொந்தப் புகலிடத்தின் கட்டிடபணி முழுவீச்சில் நடைபெற்று கொண்டிருக்கிறது. இதற்கான மொத்த செலவு ரூ.5 கோடி வரை தேவைப்படுகிறது என்று கட்டிட நிபுணர்கள் தெரிவித்துள்ளார்கள். ஊர் கூடி தேர் இழுக்க வேண்டும் என்று முன்னோர்கள் கூறுகிறார்கள். தங்களால் இயன்ற உதவிகளை இந்த புனித சேவைக்கு மனம் உவந்து அளிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். இந்த கட்டிடத்தின் ஒரு சதுரடி அமைப்பதற்கு ரூ.2,500/- என்று இந்த புனித சேவையில் எல்லோரும் பங்கேற்று உதவலாம்.

இறைவன் அருளால் தாராளமாக தர்மம் செய்ய முடிந்தவர்கள் குறைந்தபட்சம் 100 சதுரடி (ரூ.2,50,000) முதல் தங்களால் இயன்ற சதுரடிகளை அமைத்து கொடுக்க உதவலாம். அவர்களது பெயர்கள் பளிங்கு கல்லில் பொறிக்கப்பட்டு காலத்திற்கும் நிலைத்திருக்கும். அது மட்டுமல்ல தங்களது இந்த உதவி வாழ்வின் விளிம்பில் துயரத்துடன் நிற்கும் ஏழை நோயாளிகளுக்கு புதிய நம்பிக்கையும், மன நிம்மதியும் தந்து, அவர்களின் உள்ளம் தங்களையும், தங்களது சந்ததிகளையும் வாழ்த்திக் கொண்டே இருக்கும்.

(இந்த சேவை தொடர உங்களுடைய ஆதரவு என்றென்றும் தேவை. நீங்களும் உதவுவீர்கள் என்று நம்புகிறோம்) இந்த சேவைக்கு ரூ.1,00,000/- நிதிகொடுத்து நீங்கள் ஒரு நிரந்தர காப்பாளர் ஆகலாம். இந்த சேவைக்கு ரூ.60,000/- கொடுத்து வருடத்திற்கு ஒரு முறை இரண்டு நோயாளிகளை தத்தெடுத்து அவர்களது அனைத்து செலவுகளையும் ஒவ்வொரு ஆண்டும் மேற்கொள்ளலாம். (இந்த தொகை டிரஸ்டின் காப்பு நிதியில் சேர்க்கப்பட்டு அதன் வட்டியிலிருந்து இந்த தர்மம் செய்யப்படும்) ஒரு நாள் காப்பகத்தின் பராமரிப்பு செலவாக ரூ.10,000/- அளிக்கலாம். ஒரு நாள் சாப்பாட்டு செலவாக ரூ.4,000/- அளிக்கலாம். ஒரு நாள் ஒரு நபருக்கு இலவச டயாலிசிஸ் செய்ய ரூ.1,500/- அளிக்கலாம்.

தங்களது நன்கொடைகளை SRIMATHA CANCER CARE என்ற பெயரில் காசோலையாகவோ வரையோலையாகவோ, உங்களது முழு முகவரியுடன், கைப்பேசி / தொலைபேசி எண்ணையும் எழுதி No.466, 3rd Avenue, Indira Nagar, Chennai - 600 020 என்ற முகவரிக்கு அனுப்பலாம்.

தாங்கள் அளிக்கும் நன்கொடைகளுக்கு 80(G) பிரிவின் கீழ் வருமான வரி விலக்கு உண்டு.

■ சரஸ்வதி

# கௌரவர்கள் நூறு அல்ல... நூற்றியொன்று...!

**மகாபாரத யுத்த களம். பாண்டவர்களும் கௌரவரும் எதிரெதிர் பக்கத்தில் நின்று கொண்டிருந்தனர். அவர்களுடன் அவர்களை ஆதரிக்கும் படைகள் நின்று கொண்டிருந்தன.**

போரில் வெற்றி பெற அரவானை பலி கொடுத்தனர். போர் துவங்கும் நேரம். அனைவரும் தயாராக இருந்தனர்.

அப்போது தர்மர், யுத்த களத்தின் மையப் பகுதிக்கு வந்து நின்றார். ஏதோ முக்கியமான ஒன்றை தெரிவிக்கும் நோக்கில் வந்திருக்கிறார் என்பதை அவர் நின்ற தோரணையே இருதரப்புக்கும் தெரிவித்தது. இரு தரப்பு வீரர்களும் அமைதி காத்தனர்.

துரியோதனன் உள்ளிட்ட கௌரவர்கள், தர்மரையே வெறித்துப் பார்த்தவாறு, அவரது பேச்சைக் கேட்க ஆவலாக இருந்தனர்.



தர்மர், "இன்னும் கொஞ்ச நேரத்தில் போர் தொடங்கப் போகிறது. இரு தரப்பு வீரர்களுக்கும் ஒரு சந்தர்ப்பம், கடைசி சந்தர்ப்பம் அளிக்கப்படுகிறது. ஒரு அணியில் இருந்து வேறு அணிக்கு மாற விரும்புபவர் மாறலாம். எங்கள் அணியில் இருந்து யாரேனும் கௌரவர் அணிக்குச் செல்வதானால் செல்லலாம். கௌரவர் அணியில் இருந்து யாரேனும் பாண்டவர்களான எங்கள் அணிக்கு வருவதானாலும் வரலாம்" என்று கூறினார்.

அவர் அறிவிப்பை கேட்டு, கௌரவர்களுக்கு மட்டுமல்ல, பாண்டவர்களுக்கும் ஆச்சரியம். இரு படைகளும் கைகெட்டும் தூரத்தில் நின்று கொண்டு, கைகலக்க போகும் இந்தக் கடைசி நேரத்தில், யாரேனும் கட்சி மாறுவார்களா என்ன? கொஞ்ச நேரம் கனத்த மௌனம் நீடித்தது.

அந்த கனத்த மௌனத்தை கிழித்தது, கௌரவர்களின் படைகளின் பக்கம் இருந்து நகரும் தேரின் சக்கரத்தின் சப்தம். ஒரே ஒரு தேர் மட்டும், அதில் அமர்ந்திருந்த வீரனைத் தாங்கி கௌரவர் பக்கம் இருந்து பாண்டவர் பக்கம் மெல்ல நகரத் தொடங்கியது. அந்த தேரில் அமர்ந்திருந்த வீரனின் பெயர் யுயுத்சு.

கௌரவர்களில் ஒருவன். துரியோதனின் தம்பிகளில் ஒருவன். மகாபாரத போரில் கொல்லப்படாமல் தப்பித்த கௌரவர்களில் ஒருவன். திருதராஷ்டிரரின் மகன்.

என்னது? பாண்டவர்கள் பக்கம் கௌரவர்களில்

ஒருவனா? போரில் துரியோதனன் உள்ளிட்ட நூறு கௌரவர்களும் கொல்லப்பட்டார்கள் என்று தானே படித்திருக்கிறோம். இது என்ன புதுக் கதையாக இருக்கிறது? என்று கேள்விக் குறியுடன் புருவத்தை நெறிப்பவர்களுக்கு ஒரு விளக்கம்.

கௌரவர்கள் நூறு பேர் அல்ல. நூற்றியொரு பேர். ஆம். நூற்றியொரு பேர் தான். இந்த நூற்றியோராவது கௌரவனுக்கு, கௌரவர்கள் உரிய கௌரவம் கொடுக்கவில்லை. அதற்கு ஒரு காரணம் இருக்கிறது.

இந்த இடத்தில் சின்ன பிளாஷ்பேக்.

திருதராஷ்டிரரின் மனைவி காந்தாரி கர்ப்பவதியாய் இருந்தபோது அவள் ஓய்வெடுக்க வேண்டியிருந்தது. அதனால், கண்ணில்லாத திருதராஷ்டிரருக்கு பணிவிடை செய்ய அமர்த்தப்பட்டாள் சுகதா என்ற ஒரு பெண்.

அவளது பணிவிடையில் மகிழ்ந்த திருதராஷ்டிரரின் வற்புறுத்தலால் சற்று எல்லை மீறியதன் விளைவுதான் யுயுத்சு. யுயுத்சு தங்கள் தந்தைக்குப் பிறந்தவன் என்றாலும் பணிப் பெண்ணின் மகன் என்பதால் இவன் பிற கௌரவர்களால் அலட்சியமாக நடத்தப்பட்டான்.

அதோடு விதுரனைப்போல் தர்மநெறியில் சிறந்தவன் யுயுத்சு. அதனாலும் மற்ற கௌரவர்கள் இவனை வெறுக்கக் காரணமாயிற்று.

பாண்டவர்கள் அணிக்கு மாறிய யுயுத்சுவை, கண்ணன் வரவேற்று அனைவருக்கும் அறிமுகப்படுத்தினான். பாண்டவர்களை காப்பது போல, யுயுத்சுவையும் காப்பேன் என்று உறுதி எடுத்தான் கண்ணன்.

முதல் நாள் யுத்தம் முடிந்த மாலை வேளையில் இது குறித்து கேள்வி எழுப்பினான் அர்ச்சுனன்.

“கண்ணா! எங்களைக் காப்பதுபோல இவன் உயிரையும் இறுதிவரை காப்பேன் என்றாயே? நீ அப்படிச் சொன்னதன் பின்னணி என்ன?'' அர்ச்சுனன் கேட்டான்.

“காரணம் இருக்கிறது. போகப் போக உனக்கே தெரியும்“ என்றான் கண்ணன்.

பதினெட்டு நாட்கள், மகாபாரத போர்





மும்முரமாக நடந்தது. இருதரப்பிலும் கடுமையான சேதம். இதுவரை நடந்த போரில் ஏராளமான உயிர்ச் சேதம், பொருட் சேதம் ஏற்பட்டிருந்தது. தவிர யானைப்படை, தேர்ப்படை, காலாட் படை, குதிரைப் படை என்ற நால்வகை படைகளின் அழிவும் பேரழிவுதான்.

தர்மத்தை ஒரு பக்கமும், அதர்மத்தை மற்றொரு பக்கமும் நிற்க வைத்து, குருக்ஷேதிரத்தை அரங்கேற்றி, இறுதியில் தர்மத்தை நிலைநாட்டினான் கண்ணன். மரணித்த ஒவ்வொரு வீரனின் இறப்பிற்கு பின்னும், பலரின் பூர்வ ஜென்ம கதை, சாபங்கள், பாவங்கள், புண்ணியங்கள், சூழ்ச்சி, கடன் என அனைத்தும் பின்னி இருந்தன.

ஆயிரம் ஆயிரம் வீரர்களை பலிக்கொண்டு, சடலங்களை மலையாக குவித்து, குருதியை ஆறாய் பெருக்கெடுக்க செய்த குருக்ஷேத்திர போர் முடிவிற்கு வந்தது. ரத்த வாடையுடன், மரண ஓலங்களுடனும், மாபெரும் இழப்புகளுடனும், கண்ணீர்களுடனும் முற்று பெற்றது குருக்ஷேத்திர போர். தர்மத்தை காக்க நடந்த இந்த யுத்தத்தில் அதற்காய் கொடுக்கப்பட்ட விலை அதிகம் தான்.

கௌரவர் தரப்பில் கிருபர், அசுவத்தாமன், கிருதவர்மன், கர்ணனின் மகன் விருச்சகேது ஆகிய நால்வர் மட்டுமே போரின் இறுதியில் உயிருடன் எஞ்சினர். பாண்டவர் தரப்பில் பாண்டவர்கள் ஐவர், கிருஷ்ணர், சாத்தியகி மற்றும் யுயுத்சு ஆகிய எட்டு பேர்கள் மட்டும் உயிருடன் எஞ்சினர்.

போரில் ஈடுபட்ட மற்ற அனைத்து மன்னர்கள், படைத்தலைவர்கள் மற்றும் படைவீரர்கள் கொல்லப்பட்டனர்.

கர்ணன் செஞ்சோற்று கடன் தீரவேண்டி கௌரவர்களுடன் இருந்து போரில் உயிர் விட்ட பாண்டவர்களின் மூத்த அண்ணனா கர்ணன், குரு துரோணர், துரியோதனன் உட்பட நூறு கௌரவர்களுக்கும், அந்த வம்சத்தின் மூத்த அண்ணனாக இருந்து தர்மர் அந்திமகாரியங்களை செய்தார்.

கங்கை நதி தீர்த்தத்தில் உற்றார் உறவினருக்கு

ஈமக்கடன்களை நிறைவேற்றிய யுதிஷ்டிரனும் பாண்டவர்களும் ஒரு மாத காலம் அங்கேயே தங்கி துக்கம் அனுஷ்டித்தார்கள்.

-----

அப்போது அர்ச்சுனன் கண்ணனிடம் கேட்டான்.

கண்ணா, உனக்கு ஞாபகம் இருக்கிறதா? முதல் நாள் யுத்தம் முடிந்த மாலை வேளையில், "எங்களைக் காப்பதுபோல யுயுத்சுவின் உயிரையும் இறுதிவரை காப்பேன் என்றாயே? நீ அப்படிச் சொன்னதன் பின்னணி என்ன?'' என்று கேட்டேன். அதற்கு நீ, "காரணம் இருக்கிறது. போகப் போக உனக்கே தெரியும்" என்றாயே?

இப்போதுதான் போர் முடிந்துவிட்டதே? இப்போதாவது சொல்லக் கூடாதா? என்று கேட்டான்.

''அர்ச்சுனா! போரில் யுயுத்சுவைத் தவிர எஞ்சியுள்ள அத்தனை கௌரவ சகோதரர்களும் அழிக்கப்படுவார்கள். போர் முடிந்து சிறிது காலத்திற்குப் பிறகு திருதராஷ்டிரனும் காலமாவான் என்பது எனக்கு தெரியும்.

திருதராஷ்டிரன் காலமாகும்போது, அவனுக்குக் கொள்ளி வைக்க ஒரே ஒரு பிள்ளையாவது மிஞ்ச வேண்டாமா? அதனால்தான், யுயுத்சுவை நம் பக்கம் வரவழைத்தேன். இதோ இந்த யுயுத்சு தான் திருதராஷ்டிரனுக்கு இறுதிக் கடன் செய்யப் போகிற அந்த ஒரே பிள்ளை!' என்றான் கண்ணன். கண்ணனின் இந்த பதிலால் சமாதானமானான் அர்ஜுனன்.

கண்ணன் சொன்னபடியே, சில ஆண்டுகள் கழித்து திருதராஷ்டிரன் இறந்தான். திருதராஷ்டிரனுக்கு யுயுத்சு தான் அந்திம கடனை கண்ணன் விருப்பப் படியே செய்தான்






## ஆறு காபியா? ஆறாத காபியா?



**1991 தேர்தலில் திமுக படுமோசமான வெற்றி வாய்ப்பை இழந்தது.**

அறிவாலயத்தில் ஆள் நடமாட்டமே இல்லை. கோபாலபுரம் ஜிலோவென்று இருந்தது. கலைஞர் தனித்திருப்பாரே என்ற அக்கறையோடு துரைமுருகன், ஆலடி அருணா போன்றவர்கள் தலைவர் வீட்டுக்கு வருகிறார்கள்.

கலைஞர் அவரது அறையில் டிவி பார்த்துக் கொண்டிருக்கிறார். கனத்த மவுனம் நிலவுகிறது.

கலைஞரே ஆரம்பிக்கிறார். "என்னய்யா இப்படி பேயறைஞ்ச மாதிரி ஆயிட்டீங்க. காஃபி சாப்புடறீங்களா?"

இவர்கள் தலையசைக்கிறார்கள். எத்தனை தலையென்று எண்ணி, தன்னுடைய உதவியாளரிடம் கலைஞர் சொல்கிறார்.

"ஆறு காஃபி. ஆனா, ஆறாத காஃபியா கொண்டுவா"

கலைஞரின் தமிழ் விளையாட்டால் அறையில் நிலவிய சங்கடம் சட்டென்று விலகுகிறது. முதலில் துரைமுருகன் வாய்விட்டு சிரிக்க, தொடர்ந்து அத்தனை பேரும் சிரிக்கத் தொடங்குகிறார்கள்.

தோல்விகளை கலைஞர் எதிர்கொண்ட முறையே தனி. தன்னை விடாப்பிடியாக மகிழ்ச்சிக்கு உள்ளாக்கிக் கொண்டே அவற்றை கடந்தார்.

உணவு வரலாறு

13

# மேற்கத்திய ஊத்தப்பம் - பீட்ஸா

■ செல்வமணி

உலகம் முழுவதும் உணவுப்பிரியர்களால் பெரிதும் விரும்பப்படும் உணவு பீட்ஸா. பீட்ஸாவின் வரலாற்றை ஆராய்ந்தால், அது நம்மை பல நூற்றாண்டுகளுக்கு முன் அழைத்துச் செல்கிறது.

பீட்ஸாவின் தாயகம் இத்தாலியின் நேபிள்ஸ் நகரம். இங்கு தான் முதல்முதலாக தயாரிக்கப்பட்டது. லத்தின் மொழி சொல்லான "பின்சா" என்பதிலிருந்தான் பீட்ஸா எனும் சொல் உருவானதாக கூறப்படுகிறது.

தென்மேற்கு இத்தாலியில் உள்ள நேப்பிள் பகுதியைச் சேர்ந்த மக்கள் கடும் உழைப்பாளிகள். வறுமையான சூழ்நிலையில், வயிறும் நிறைய வேண்டும், செலவும் அதிகம் ஆகக் கூடாது என்ற எண்ணத்தில், தட்டையான ரொட்டியை உருவாக்கினார்கள்.

இதன் சுவை அவர்களை பெரிதும் கவர்ந்துவிடவே, அவர்களின் முக்கிய உணவாகவே பீட்ஸா மாறிவிட்டது. ஆரம்ப காலங்களில் வீதியில் விற்கப்படும் உணவாகவே பீட்சா இருந்திருக்கிறது. இதை ஏழைகளின் உணவு என்று அழைத்திருக்கிறார்கள்.

நேப்பிள் நகரில் வசித்த ஸ்பானிய ராணுவ வீரர்கள் பீட்சாவைத் தேடி வந்து சாப்பிட்டார்கள். அதற்காகவே உடனடியாக பீட்சா தயாரிக்கும் பழக்கம் உருவானது. இது போலவே பீட்ஸாவை மீனவர்கள் கடலுக்குச் செல்லும்போது உடன் கொண்டு போயிருக்கிறார்கள்.

*1889* - ஆம் ஆண்டில் ஒரு நாள் இத்தாலியின் மன்னர் உம்பர்டோவும், ராணி மெர்கரிட்டா நகர்வலம் வரும் போது, அந்த பகுதி மக்கள் நிறைய பேர் தட்டையான ரொட்டியை

**விண்வெளிக்கு டெலிவரி செய்யப்பட்ட பீட்ஸா**

**அமெரிக்காவின் நாசா நிறுவனம் விண்வெளியில் ஐந்துக்கும் அதிகமான விண்வெளி ஆராய்ச்சி மையங்களை நிர்வகித்து வருகிறது. இங்கு மாசக்கணக்கில் தங்கி விண்வெளி வீரர்கள் ஆராய்ச்சி செய்வார்கள்.**

**இங்குள்ள பாப்லோ நெஸ்போலி' என்ற விண்வெளி வீரர், நீண்ட நாட்களாக பீட்ஸா வேண்டும் என்று கோரிக்கை வைத்து வந்தார். இவருக்கு பீட்ஸாவை டெலிவரி செய்திருக்கிறது நாசா.**





விரும்பி சாப்பிடுவதைப் பார்த்த ராணி, தானும் ஒரு ரொட்டியை வரழைத்து சாப்பிட்ட போது, அதன் ருசியில் மயங்கிப்போனார்.

உடனே தனது சமையல்காரரிடம் அந்த உணவு இன்னும் மெருகேற்றி செய்ய உத்தரவிட்டார். சமையற்காரரரான 'ரஃபேல் எஸ்போசிடோ' மன்னரையும், மகாராணியையும் மகிழ்விக்க எண்ணி இரண்டு விதமான தட்டையான ரொட்டிகளை தயார் செய்தார்.

ஒரு ரொட்டி மீது பன்றி இறைச்சியை பரவவிட்டிருந்தார். மற்றொன்றில் பாலாடைக்கட்டி, தக்காளி மற்றும் துளசி இலை. சேர்ந்த கலவையைப் பரவவிட்டிருந்தார்

இவற்றுக்கு, ராணியின் பெயரான மெர்கரிட்டாவுடன் பீட்ஸா என்ற பெயரையும் இணைத்து சேர்த்து மெர்கரிட்டா பீட்ஸா என்று பெயர் வைத்தனர். இது கொஞ்சம் கொஞ்சமாக மற்ற நாடுகளுக்கும் பரவியது.

பீட்ஸாவின் தாயகம் இத்தாலி என்றாலும், அதற்கு முன்பே உலகின் பல நாடுகளில் பீட்ஸாவை போலவே, பீட்ஸாவுக்கு முன்னோடியாக சில வகை ரொட்டிகளை சாப்பிட்டு வந்திருக்கின்றனர்.

### எகிப்து

எகிப்தியர்கள் மற்றும் மத்திய கிழக்குப் பகுதியில் வசித்த மக்கள் சுடுமண் அடுப்புகளில் சுடப்பட்ட கெட்டியான தட்டை ரொட்டியை உணவாக உண்டுவந்தனர். மேலும், தட்டையான ரொட்டியில் ஆலிவ் எண்ணையில் மூலிகைகளை சேர்த்து அடுப்பில் சமைத்து உண்டனர்.

### பாபிலோனியர்கள்

மத்திய கிழக்கில் பழங்காலத்திலேயே பூர்வ பாபிலோனியர்கள், தட்டையான் ரொட்டியில் பாலடைக்கட்டி மற்றும் பேரீச்சைப் பழம் சேர்த்து அடுப்புகளில் சுடப்பட்ட புளிப்பில்லாத அப்பங்களை சாப்பிட்டார்கள்.

### ரோம்

கிரேக்க, ரோமானிய மக்கள் இந்த ரொட்டிகளின் மீது ஆலிவ் எண்ணெய் மற்றும் மூலிகைகளைச் சேர்த்து சாப்பிட்டனர். கி.மு. 3-ம் நூற்றாண்டில் எழுதப்பட்ட ரோம சாம்ராஜ்ஜிய சரித்திரத்தில் இது போன்ற தட்டை ரொட்டியைச் சமைத்து சாப்பிடும் பழக்கம் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

### பாரசீகம்

கி.மு. 6-ம் நூற்றாண்டில் பாரசீக மன்னர் மாவீரன் டாரியஸ்' தனது படைவீரர்களுக்குத் தட்டை ரொட்டிகளின் மீது பாலடைக் கட்டிகளையும் பேரீச்சம் பழங்களையும் வைத்து தந்ததாகவும் குறிப்புகள் இருக்கின்றன.

உணவு ஆய்வாளர் மார்கஸ் கேவியஸ் அபிசியஸ் எழுதிய நூலிலும் சிக்கன், பாலடைக்கட்டி, மிளகு, எண்ணெய் போன்றவற்றை ரொட்டியின் மீது பரப்பி சுடப்பட்டது குறிப்பிடப்படுகிறது.

இரண்டாம் உலகப்போரின் போது, இத்தாலியில் சண்டையிடுவதற்காக வந்த பிரிட்டிஷ் வீரர்களுக்கு பீட்ஸா பிடித்துப்போய்விடவே அவர்கள் அதை தங்கள் நாட்டிலும் பிரபலப்படுத்தினர்.

19-ம் நூற்றாண்டில் அமெரிக்காவுக்கு இடம்பெயர்ந்த இத்தாலியர்கள் அங்கே பீட்ஸாவை அறிமுகம் செய்தார்கள். இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் பீட்ஸா உலகம் முழுதும் பரவியது.

கொரிய வகை பீட்சா சற்று கடினமானது. அவை சோளம், உருளைக்கிழங்கு, சர்க்கரைவள்ளிக் கிழங்கு, இறால் அல்லது நண்டு போன்றவற்றைக் கொண்டிருக்கின்றன. அதை இளைஞர்கள் அதிகம் விரும்பி சாப்பிடுகிறார்கள்.

ஜப்பானிய பீட்சாக்களில் அதிகம் கடலுணவுகள்

### முதல் "ஹோம் டெலிவரி"

**பீட்ஸாவை வீட்டுக்கே டெலிவரி செய்யும் பழக்கம் 1960 ம் ஆண்டு உருவானது. பீட்ஸா முன்பதிவு செய்யப்பட்டு முதன்முதலில் யாருக்கு கொடுக்கப்பட்டது என்று வரலாற்றை ஆய்ந்து பார்த்ததில், அது 10 ஆம் நூற்றாண்டில் கத்தோலிக்க ஆயர் ஒருவருக்கு பீட்ஸா வழங்கப்பட்டுள்ளது தெரிய வந்துள்ளது.**





சேர்க்கப்படுகின்றன. பிரேசில் பீட்சாவில் பழங்கள் கூடுதலாக சேர்த்துக் கொள்கிறார்கள்.

பிரேசலின் பீட்சா இத்தாலிய சுவையில் இருந்து பெரிதும் மாறுபட்டது. நார்வீஜியர்கள்தான் உலகில் அதிகம் பீட்சா சாப்பிடுகிறவர்கள். அடுத்த இடம் ஜெர்மானியருக்கு.

## உலகம் முழுக்க "பீட்ஸா" தான்

**உலகின் எந்த நாட்டுக்கு சென்றாலும் பீட்ஸாவுக்கு வேறு பெயர் இல்லை. உலகில் உள்ள எல்லா மொழிகளிலம் இதற்கு பீட்ஸா என்று தான் பெயர்.**

**இதனால், பீட்ஸா என்ற சொல்லை மொழிபெயர்க்கத் தேவை இல்லை. உலகில் எந்த நாட்டுக்குச் சென்றாலும் அச்சொல்லை தெரிந்து வைத்திருக்கிறார்கள்,**

## தமிழகத்தின் "பீட்ஸா"

**தமிழகத்தில் பீட்ஸா அறிமுகமாவதற்கு முன்பேயே, நம் அம்மாக்கள் பீட்ஸாவை செய்திருக்கிறார்கள். என்ன.... ரொட்டிக்கு பதில் அரிசி மாவு. என்ன புரியலைங்களா? அதாங்க.... ஊத்தப்பத்தை தான் சொல்றேன்.**

**வெங்காயம், நிறைய காற்கறியெல்லாம் போட்டு, செய்யும் ஊத்தப்பம் தான் தமிழகத்தின் பீட்ஸா.**

1996 ஆம் ஆண்டில் இந்தியாவில் முதல் முறையாக பீட்ஸா அறிமுகப்படுத்தப்பட்டது. இங்கே உள்ள பீட்ஸா நிறுவனங்கள் தந்தூரி சிக்கன் மற்றும் பன்னீர் போன்ற பல இந்திய உணவுகளுடன் பீட்சாவை தயாரித்து வழங்குகின்றனர். இத்தாலிய பீட்சாவோடு ஒப்பிடும்போது இந்திய பீட்சா கூடுதல் காரம் கொண்டது.

இத்தாலியில் ஏழைகளின் உணவாக இருந்த பீட்ஸா, உலகம் முழுவதும் பரவிய பின் பணக்காரர்களின் உணவாக மாறிவிட்டது.



●

## எழுத்தாளர் பாலகுமாரன் அறிவுரைகள்

## படித்ததில் பிடித்தது

புத்தகங்களை துணைக் கொள்.
உடலுழைப்பை அதிகரி.
சமூகம் புறக்கணித்தவற்றை கைவிடு.
குளிர் நீரில் குளி.
கொஞ்சமாய் சாப்பிடு.
தியானம் கைக்கொள்.
இரவு உறங்கும் முன் நெடுந்தொலைவு நட.
உடுப்பில் வெள்ளை நிறத்தைப் பழக்கமாக்கு.
உணவில் கீரை சேர்த்துக் கொள்.
எத்தனை வலித்தாலும் அழாதே. சிரி.
ஆத்திரம் அகற்று.
. கேலிக்கு புன்னகை தா.
கோபத்திற்கு மௌனத்தைக் கொடு.
நட்புக்கு நட்பு செய்.



வேலை சொல்லித் தருபவரிடம் மிகப் பணிவாக இரு.
அலட்சியப்படுத்தினால் விலகி நில்.
அன்பு செய்தால் நன்றி சொல்.
இதமாகப் பேசு.
நீ ஜெயிப்பாய். இது நிச்சயம் ! ! !
வாழ்க்கையில் உன்னத நிலைக்கு வருவாய். இது சத்தியம்.




# கடலையும் வென்று காட்டிய தமிழர்கள்

■ நறுமுகை

**ஒடிசா பாலு, தமிழ் ஆய்வு உலகில் குறிப்பிடத்தக்க கடலியல் ஆய்வாளர். பல்வேறு நாடுகளில் உள்ள வழக்குச் சொற்களுக்கும் தமிழ் மொழிக்கும் உள்ள தொடர்பை தொடர்ந்து வெளிப்படுத்தி வருபவர்.**

தமிழர்களின் முந்தைய பண்பாடு சார்ந்த ஆய்வுகளுக்காக, பெரும்பாலான நேரங்களை, கடலில் செலவழிப்பவர். தமிழர்களின் பண்பாடு சார்ந்த செயல்பாடுகளை மீட்டெடுப்பதன் மூலம் இன்றைய இளைய தலைமுறைக்கு நல்ல வழி காட்ட முடியும் என்று நம்புபவர். கடலில் கிடைக்கும் தரவுகளையும், இலக்கிய, வரலாற்று தொல்லியல் ஆய்வுகளை ஒப்பிட்டு முடிவுகளை வெளியிடுபவர். அவருடன்...

♦ **தமிழர்கள் கடலில் எந்த அளவுக்கு கோலேச்சி இருந்தனர்?**

தமிழர்கள் போகிற போக்கில் கடல் வழி பயணம் மேற்கொண்டவர்கள் இல்லை. தங்களுடைய ஒவ்வொரு நகர்வையும், திட்டமிட்டே செய்தனர். குறிப்பாக, கடல் ரீதியான வணிகத்தில் மற்ற இனக்குழுக்களை விடவும், தமிழர்கள் தழைத்தோங்கி இருந்தனர் என்பதற்கு பல்வேறு ஆதாரங்கள் உள்ளன.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, கடல் சார்ந்த மொத்த திசைகளையும் தெரிந்த 500 பேரைக் கொண்ட குழுக்களைக் கொண்டிருந்தனர். இவர்களுக்கு ‘திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர்’ என்று பெயர். அதே போல், உலக அளவில் கடல் திசைகளை அறிந்து, 28 நாடுகளைச் சுற்றி வந்த கடல் வல்லுநர் குழு ஒன்று இருக்கிறது. இவர்களுக்கு பதினென் விசையறிந்தார்’ என்று

**உலகில் கப்பல் கட்டுமானத்தில் சிறந்து விளங்கிய தமிழர்**


வல்வெட்டித்துறையில் உருவாக்கப்பட்டவை


சோழர் கால கப்பல் அடித்தள மாதிரி




பல்லவர் காலத்து கப்பல் பொறித்த நாணயம்


நியூசிலாந்து நாட்டில வெலிங்டன அருங் காட்சியகத்தில உள்ள தமிழ்மணி

பெயர். இவர்களை சாதாரணமாக எடை போட்டு விட முடியாது. இவர்கள் கடலின் மையப் பகுதிக்கு சென்று, சின்ன சேதாரம் கூட இல்லாமல், மீண்டும் அதே இடத்துக்கு செல்வர்.

இதற்கு பல்வேறு வரலாற்று, இலக்கிய ஆய்வு குறிப்புகள் இருக்கின்றன. 1,024 திசைகளை அறிந்தவர்களை 'கணியர்' என்பர். இப்போது மட்டுமல்ல, அப்போதும் கடல் கொள்ளைகள் இருந்தன. முத்து, பவளம் போன்ற விலை உயர்ந்த பொருட்களை எடுத்து செல்ல மாட்டு சாணத்தை பயன்படுத்தினர்.



**♦ ராபர்ட் புரூஸ் புட்டின் கைக் கோடாரியும், அதிரம்பாக்கத்தில், 15 லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு மனிதர்கள் வாழ்ந்த தடயமும், 10 லட்சம் ஆண்டுகளுக்கு மனிதர்கள் இருந்த குடிலும் குகையும், பழங்கால மனிதர்கள் வாழ்ந்ததற்கான தடயம் மட்டுமே. இதில், நாகரிக இனக்குழு கொண்ட தமிழர்கள் எப்படி வந்தார்கள்? இது ஒருவகையில், இனவாதம் ஆகாதா?**

உலகத்தில் உள்ள மொழிக் குடும்பங்கள் குறித்து தீவிர ஆராய்ச்சி நடந்து வருகிறது. இதில், 3,000ல் இருந்து 7,500 மொழிகள் ஆராய்ச்சி செய்யப்பட்டு வருகின்றன. இதில், 207 மொழிக் குடும்பங்களில் தமிழ் சொற்கள் உள்ளன. 120 மொழிகளில், தமிழின் 500 சொற்கள் உள்ளன. மேலாண்மை திறன், வணிகம், ஆன்மிகம் இவற்றில் சிறந்து விளங்கும் மொழி மட்டுமே, நீண்ட காலம் உயர்ந்திருக்கும்.

தமிழ் இன்றும் நிலைத்து நிற்பதற்கு இது முக்கிய காரணம். ஆதிச்சநல்லுவரில் கிடைத்த பொருட்களில், அது இரும்பு காலத்தை சேர்ந்தது என்பதை அறிய முடியும். அதில், பல்வேறு நாட்டினரின் உடல்கள் கிடைத்தன. வணிகத்தில் சிறந்து விளங்கும் நகரத்துக்கு மட்டுமே, உலகத்தின் பல்வேறு நாடுகளில் இருந்து வணிகர்கள் வருவர்.

எனில், இரும்பு காலத்திலேயே ஆதிச்சநல்லுவர் வணிகத்தில் சிறந்து விளங்கியதை அறிய முடியும். உலகம் முழுக்க உள்ள கடல்சார் பகுதிகளில், 26,000 தமிழ் பெயர்கள் கொண்ட பகுதிகள் இருக்கின்றன. இதில் இருந்து தமிழர்களின் தொன்மை வரலாற்றை அறிய முடியும்.

**♦ தமிழர்களின் தொன்மை நிலப்பரப்பில், வட எல்லையான வடவேங்கடத்தை மறுத்து, இமயமலையே வட எல்லை என்கிறீர்கள். தொல்காப்பியத்திலும் அதற்கான குறிப்புகள் உள்ளதே. இதை எப்படி மறுக்கிறீர்கள்?**



இது புரிதல் சார்ந்தது. வேங்கடம் என்றால் வெண்மையான மலைகளை கொண்ட பகுதி என்று அர்த்தம். சங்க இலக்கியமான புறநானூறில் வடபெருங்கடல் என்ற பெயரில், இப்பகுதி குறிக்கப்படுகிறது. ஒப்புமை சார்ந்தே நாம் தொடர்ந்து அடையாளப்படுத்தி வருகிறோம்.

இன்றைக்கும் அந்த ஒப்புமை தொடர்கிறது. உங்கள் நண்பரின் சாயலில் ஒருவர் சென்றார் என்றால், அவரைப் போல் ஒருவர் செல்கிறார் என்றே நீங்கள் அடையாளப்படுத்துவீர்கள். அதுபோலவே இதுவும்.

திருப்பதி போல, வடக்கு பகுதியில் உள்ள பெரிய மலைகளை கொண்ட இடம் என்பது தான் அதற்கு பொருள். எனவே, ஒப்புமைக்காக சொன்னதை, அப்படியே ஏற்றுக் கொள்ளக் கூடாது. ஒப்புமை வேறு; உண்மை வேறு. அதன் அடிப்படையில் பார்க்கப் போனால், இமயமலையே தமிழர்களின் தொன்மையான வடக்கு எல்லைப் பகுதி.

**♦ உலகத்தில் உள்ள பெரும்பாலான வரலாற்று, சமூக, மானுடவியல் ஆய்வாளர்கள், வட ஆப்பிரிக்காவில் இருந்தே, மக்கள் அனைத்து நாடுகளுக்கும் கால்நடை பயணமாகவே சென்றனர் என்று நிறுவியுள்ளபோது, நீங்கள் மட்டும், இந்தியாவில் இருந்து குறிப்பாக, தமிழகத்தில் இருந்தே மக்கள், பாய்மரம்,**

**கப்பல் போன்றவற்றின் மூலம் உலக நாடுகளில் பரவினர் என்று சொல்வதன் பின்னணி என்ன?**

வட ஆப்பிரிக்காவில் இருந்து மக்கள் பிரிந்து சென்றனர் என்பது, 1958ல் கொண்டு வரப்பட்ட கோட்பாடு. ஆனால், குமரிக்கண்டம் லெமூரியா குறித்து, 1863ல் இருந்தே பேசப்பட்டு வருகிறது.

தமிழ் இலக்கியங்களில் சிலம்பு, மணிமேகலை, புறநானூறு, கலித்தொகை, இறையனார் அகப்பொருளிலும் குறிப்புகள் உள்ளன. இன்று வரை, ஆஸ்திரேலிய பழங்குடியினர் பலரும் தமிழ்ச் சொற்களை பயன்படுத்தி வருகின்றனர். அந்த காலத்தில், ஒரு தகவல் கிடைத்தால், அதை உறுதி செய்யவே நான்கு மாதங்கள் ஆகும்.

ஆனால், இப்போதுள்ள நவீன தொழில்நுட்பத்தை பயன்படுத்தி, எளிதில் கண்டுபிடித்து விடலாம். மற்ற பயணங்களை விட, கடல்வழி பயணம் விரைவாக செல்ல கூடியது. தமிழர்கள் ஆமையின் வழியாக, கடல் நீரோட்டத்தை கண்டுபிடித்தனர்.

ஆமை பல ஆயிரம் மைல்கள் பயணம் செய்யக்கூடியது. நடுப்பகுதியில் செல்லும்போது ஆமைகள் நீந்தாது. நீரோட்டத்தில் மிதந்து கொண்டேதான் செல்லும். ஆமை முட்டையிட்ட இடத்தில்தான் அதன் சந்ததிகளும் முட்டையிட வரும். ஆமைகள் முட்டையிடும் 302 இடங்கள் தமிழ்ப் பெயர்களாக உள்ளன.

மேற்கு ஆஸ்திரேலியாவில் கூலன்தீவு, ஊர் தீவு, பப்பு நியூ கினியாவில் களிமாண்டன் கடற்கரை, நாள்மாடல் குமரி, குறள் கடற்கரை, குமரிக் கடற்கரை, குரல், இந்தோனேசியாவில் கலிமாந்தன், மெக்சிகோவில் தமிழிபாசு என்று சொல்லிக்கொண்டே போகலாம். கடலூர் பழையாறையில் ஆமைகள் போகும் இடம் பர்மாவில் தமிழா என்ற பெயரில் இன்றும் உள்ளது. ஆமைகள் இங்குவந்து முட்டையிட்டுச் செல்கின்றன.

உலகத்தில் காற்றை வைத்துப் பயணம் செய்துள்ளார்கள். ஆனால், தமிழர்கள் காற்றையும் நீரோட்டத்தையும் பயன்படுத்தி இருக்கிறார்கள். கடற்கோள் அழிந்ததால் மட்டும் இவர்கள் செல்லவில்லை. முன்பே, கடலில் பயணம் செய்யும் தன்மை பெற்றிருந்தார்கள். இதன்மூலம் உலகத்தின் பல்வேறு பகுதிகளுக்கு மக்கள் சென்றிருக்கின்றனர்



என்பதை அறிய முடியும். அம்மக்கள் தமிழர்களாக இருந்திருக்கின்றனர்.

♦ **சரஸ்வதி நதியைப் போல, குமரிக்கண்டமும் லெமூரியாவும் நம்பிக்கையில் மட்டுமே இருக்கக் கூடிய நிலப்பகுதியா?**

இல்லை. 1863ல் இருந்து குமரிக்கண்டம் குறித்து ஆராயப்பட்டு வருகிறது. இது தொடர்பான குறிப்புகள், சிலம்பதிகாரம், மணிமேகலை, புறநானூறு, கலித்தொகை, இறையனார் அகப்பொருளிலும் குறிப்புகள் உள்ளன.

இது குறித்து, 1941ல் அரசன் சண்முகனார், சோமசுந்தர பாரதி, சுப்பிரமணியம் சாஸ்திரி போன்ற பலர் சொன்னாலும், தமிழரின் தாயகம் குமரி நிலம் பிரபலப்படுத்தியவர் பாவாணர் ஆவார். பலரும் இது குறித்து ஆய்வு செய்தனர். இதுவரை வந்த ஆவணங்களை தொகுத்து போட்டுவிட்டு லெமூரியாவும் குமரிக்கண்டமும் பொய், தமிழ் இலக்கியவாதிகளின் கற்பனை என முடித்தார்கள். சுகி. ஜெயகரன் என்ற நிலவியல் ஆய்வாளர், மண்ணியல் நோக்கில் மட்டும், நிலத்தை ஒட்டிய பகுதி மட்டும் மூழ்கி இருக்கலாம் என்றார்.

1860 முதல் 2007 வரை பேசினாலும் இந்திய பெருங்கடலில் இருக்கும் தமிழனின் பண்பாட்டினை நாம் கணக்கில் எடுக்கவில்லை. குறிப்பாக, தென்புலத்தான் என வள்ளுவர் சொல்லியதற்கு இறந்த முன்னோர் என்றனர்.

ஏன் இது திருவள்ளுவர் வாழ்ந்த காலத்தில் கடலில் இருந்து தப்பி வந்த மக்களை சொல்லியிருக்கக் கூடாது? குமரிக்கண்டம் பேசிய யாரும்

ஏன் கடலாய்வு









செய்யவில்லை? கடலாய்வின் அடிப்படையில் செயல்பட்டால் மட்டுமே குமரிக்கண்டம் குறித்த உண்மைகள் தெரியவரும்.

♦ **இன்று நவீன தொழில்நுட்ப மாற்றங்கள் வந்த பிறகும் அதை நிரூபிக்க முடியவில்லையே... இன்னுமா லெமூரியா என்ற நிலப்பரப்பை நம்புகிறீர்கள்?**

கன்னியாகுமரியில் இருந்த மீனவர்களை சந்தித்தபோது நமது தொன்மையினை இனங்கண்டு உணர முடிந்தது. கடலுக்குள் 8 கி.மீ. தூரத்தில் இருந்த ஆடு மேய்ச்சான் பாறை, குகை, மூழ்கிய கோயில் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது.

1917ல் ஆபிரகாம் பண்டிதர் வெளியிட்ட கருணாகசாகரம் எனும் நூலில் லெமூரியா பற்றிய செய்தி உள்ளது. ஹெச்.ஏ.கிருஷ்ண பிள்ளையின் இரட்சணிய யாத்திரிகமும் பதிவு செய்துள்ளது. இச்செய்திகள் உண்மையா என பலரிடம் கேட்டபோது முதலில் பொய் என்றனர்.

பிறகு மீனவர்களுடன் கலந்தாலோசித்தபோது, திரிகோணப் பாறை எனப்படும் விவேகானந்தர் பாறையில் இருந்து 8 கி.மீ. தூரத்தில் 36 மீ ஆழத்தில் 15,000 சதுர அடியில் பழைய கால இடிபாடுடன் கூடிய கோயில் உள்ளது. இதனை டாலமியும் கூறியுள்ளார்.

பின்பு, இந்தியப் பெருங்கடல் முழுவதும் ஆய்வு செய்தோம். இதுவரை நான்கு இடிபாடுகள் உள்ள இடங்களையும் மற்றும் ஒரு தீவு மூழ்கி உள்ளதையும் கண்டு இருக்கிறேன். எனில் அக்காலத்தில் அந்நிலம் மூழ்கி இருக்காது என்பதற்கு என்ன உத்தரவாதம்?

♦ **இந்தியப் பெருங்கடலில், தமிழர்களின் பண்பாட்டு வரலாற்றை பதிவு செய்வதில் நம் முன்னோர்கள் தவறி விட்டார்களா?**

வந்தாரை வாழ வைத்தார்கள். அதிலே திருப்தி கண்டு விட்டனர். அடுத்தவர்களை உபசரிப்பதில் தங்கள் வாழ்நாளை செலவிட்டனர். தங்கள் பண்பாட்டை பதிவு செய்ய வேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்கு இருந்ததில்லை. இதுவே காரணம்.

♦ **தமிழர்களின் கடல் போக்குவரத்து முற்றிலும் சிதைந்து போனதற்கு என்ன காரணம்? பெரும் வரலாற்றுப் பிழையில் அதுபோன்ற மாற்றம் நடந்ததா?**

இயற்கை சீற்றங்கள் ஒரு காரணம். மற்றபடி, உலகத்தின் பல்வேறு நாடுகளில் இருந்து தமிழகத்தில் வணிகம் செய்தவர்கள், இங்கிருந்து தமிழர்களை அழைத்துக் கொண்டு பல நாடுகளுக்கும் கடல் வழி மார்க்கத்தை கண்டுபிடித்தனர். பிறகு அங்கங்கு அப்படியே செட்டில் ஆகி விட்டனர். இப்படித்தான் பல்வேறு நாடுகளில் தமிழர்கள் இருக்கின்றனர்.

லட்சத்தீவில் அகத்தி என்ற தீவில் கப்பலுக்காக காத்திருந்தேன். அப்போது கிரீஸ் நாட்டு கப்பல் வந்தது. அதில் இருந்து வந்த மாலுமி, சீக்கிரம் வாங்கடா என்று திட்டிக் கொண்டிருந்தார். எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. விசாரித்ததில், அவர் பெயர் டி.கேப்ரியேல், நாகர்கோவிலை சேர்ந்த தமிழர் என்று தெரியவந்தது.

அவர் பெயரையும் அவரையும் பார்த்தவுடன் வெளிநாட்டினர் என்று நம்பினேன். அவர் மட்டும் பேசவில்லை என்றால், அவர் தமிழர் என்று கண்டுபிடித்திருக்க முடியாது. இப்படித்தான் உலகத்தின் பல்வேறு பகுதிகளில், வெவ்வேறு மதங்களின் பெயர்களில் தமிழர்கள் இருக்கிறார்கள். இனத்தை குறுக்கியதில் மதங்களுக்கு பெரும் இடம் உண்டு.

●



# புலி வேட்டை

**இந்தியாவை ஆண்டு கொண்டிருந்த பிரிட்டிஷார், புலி வேட்டையாடுவதை கௌரவமான ஒன்றாகக் கருதினார்கள். சுட்ட புலியைக் குப்புறப்போட்டு, அதன்முன் தன் மனைவியோடு நின்று, துப்பாக்கியுடன் சிரித்தாற்போல புகைப்படம் எடுத்துக் கொள்வது என்பதை அளப்பரிய சாதனையாக நினைத்தார்கள். தாங்கள் சுடும் புலி, குறைந்தபட்சம் பத்து அடி நீளமாவது இருக்க வேண்டும் என்பதிலும் கவனமாக இருப்பார்கள்.**

இந்திய மகாராஜாக்களும் அப்படித்தான். வேட்டையில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்கள். புலி வேட்டையாடுவதில் மூன்று முறைகளைக் கடைபிடித்தார்கள்.

புலி நடமாட்டமுள்ள பகுதிகளை புக்கிகள் கண்டறிந்து சொல்லுவார்கள். அதற்கு அருகிலுள்ள பகுதியில் மகாராஜா, மரத்தின் மேலேறி மேடையில் துப்பாக்கியோடு காத்திருப்பார். கீழே சற்று தொலைவில் ஒரு ஆடோ, மாடோ, மானோ உயிரோடு கட்டப்பட்டிருக்கும்.

சாயங்கால வேளையில் புலிக்குப் பசி எடுக்க ஆரம்பிக்கும். தன் இடத்தில் இருந்து எழுந்து, சோம்பல் முறித்து, இரையை மோப்பம் பிடித்து வரும். கட்டப்பட்டிருக்கும் விலங்கு கத்த, புலி பாய, மகாராஜாவின் துப்பாக்கியிலிருந்து குண்டும் பாயும். இது முதல் முறை.



அதிகாலையிலேயே புலிக்கு இரை வைத்துக் காத்திருப்பார்கள். புலி, இரையை அடித்து இழுத்துச் சென்று சாப்பிட ஆரம்பிக்கும். அப்போது யானைமீது சென்று புலியைச் சுற்றி வளைத்துச் சுடுவது இரண்டாவது முறை. இந்த முறையில் மகாராஜாவின் குறி தப்பினால், வேறு யாராவது சுட்டு விடுவார்கள். ஏனெனில் புலி, பூ பறித்துக் கொண்டிருக்காதே.

மூன்றாவது முறை, மகாராஜாக்கள் கொஞ்சமும் நோகாமல் நொங்கெடுக்கும் முறை. அதாவது மகாராஜா காட்டில் ஒரு பகுதியில் தனக்கான மேடையில் சௌகரியமாக உட்கார்ந்து கொள்ளுவார். யானைகளோடும் தீப்பந்தங்களோடும் முரசு கொட்டுபவர்களோடும் ஒரு படையினர் புலியின் இருப்பிடத்துக்கே சென்று, அதனை மிரள வைத்து மகாராஜா காத்திருக்கும் பகுதிக்கு ஓட்டி வருவார்கள். மகாராஜா அதை டுமீல் செய்வார்.

ஆனால், ரேவா சமஸ்தான மகாராஜா, புலி வேட்டைக்கு நான்காவதாக ஒரு புதிய முறையை உபயோகப்படுத்தினார். அவரிடம் பழக்கப்படுத்தப்பட்ட குரங்கு ஒன்று இருந்தது. வேட்டைக்கான மேடையில் அவர் இருக்கும்போது, அந்தக் குரங்கு மரத்தின் உச்சியில் இருக்கும்.

மகாராஜா, ஜாலியாக புத்தகங்கள் படித்துக் கொண்டிருப்பார். புலி அந்தப் பக்கமாக வந்தால், அந்தக் குரங்குக்குத் தெரிந்துவிடும். உடனே இறங்கிச் சென்று மகாராஜாவிடம் சத்தம் எழுப்பும். மகாராஜாவும் புத்தகத்தைக் கீழே வைத்துவிட்டு துப்பாக்கியைத் தூக்குவார்.

வேட்டை குறித்து, மிரள வைக்கும் புள்ளிவிவரங்கள் சில. கூச் பிகார் மகாராஜா நிருபேந்திர நாராயண், தன் வாழ்நாளில் 365 புலிகள், 438 காட்டெருமைகள், 207 காண்டாமிருகங்கள், 311 சிறுத்தைகளை வேட்டையாடியிருக்கிறார். சர்குஜா சமஸ்தான ராஜா, ராமானுஜ் சரன் சிங், தம் வாழ்நாளில் சுட்ட புலிகளின் எண்ணிக்கை மட்டும் ஆயிரத்தைத் தாண்டும். ரேவா சமஸ்தான மகாராஜா குலாப் சிங்கில் புலி ஸ்கோர் தொள்ளாயிரத்துச் சொச்சம்.

முகிலின். “அகம் புறம் அந்தப்புரம்“ என்ற நூலில் இருந்து…

# இலக்கியத்தில் நகைச்சுவை

கவிஞர் பாரதிதாசன் மயிலின் கழுத்து நீண்டு இருப்பதனை நகைச்சுவையாக விளக்குகிறார்.

அயலான் வீட்டில் அறையில் நடப்பதை
எட்டிப் பார்க்கா திருப்ப தற்கே
இயற்கை யன்னை இப்பெண் கட்கெல்லாம்
குட்டைக் கழுத்தைக் கொடுத்தான். உனக்கோ
கறையொன் றில்லாக் கலாப மயிலே !
நிமிர்ந்து நிற்க நீள் கழுத்து அளித்தான்.



# இந்திராவின் ராஜதந்திரம்

**இந்திரா காந்தி அரசு, மன்னர் மானிய ஒழிப்பில் தீவிரம் காட்டியது. அப்போது அதிகபட்ச ஆண்டு மானியமாக வரிவிலக்கோடு ரூ.26 லட்சம் பெற்றவர் மைசூர் மகாராஜா ஜெய சாமராஜேந்திர உடையார்.**

குறைந்தபட்சமாக சௌராஷ்டிராவில் இருந்த குட்டி சமஸ்தானமான கட்டோடியாவின் ராஜா ரூ.192 பெற்றுக் கொண்டிருந்தார். எதற்கு அனாவசியச் செலவு என்று இந்திரா, மன்னர் மானிய ஒழிப்புத் தீர்மானத்தை அந்த செப்டம்பரில் நாடாளுமன்றத்தில் கொண்டுவந்தார். கீழவையில் நிறைவேறியது. ஆனால், மேலவையில் ஒரு வாக்கு வித்தியாசத்தில் தோல்வியடைந்தது.

'மானியத்தை மட்டும் ஒழித்தால் போதாது. மன்னர்களின் பின் ஒட்டிக் கொண்டிருக்கும் வெற்றுப் பட்டங்களையும் ஒழிக்கவேண்டும்.' இந்திரா, அவசரச் சட்டம் ஒன்றை நிறைவேற்ற முடிவுசெய்தார். ஐதராபாத்தில் சுற்றுப்பயணம் மேற்கொண்டிருந்த அப்போதைய ஜனாதிபதி வி.வி. கிரி, இந்திராவின் விருப்பத்துக் கேற்ப அரசாணையில் கையொப்பமிட்டார். மன்னர்கள் தரப்பில் நீதிமன்றத்துக்குச் சென்றார்கள். தீர்ப்பு மன்னர்களுக்குச் சாதகமாக அமைந்தது. 'இந்தச் சட்டம் செல்லாது' என்று. இந்திராவின் அடுத்த காய் நகர்த்தலை யாருமே எதிர்பார்க்கவில்லை.

ஆட்சியைக் கலைத்துவிட்டு தேர்தலை அறிவித்தார் (1971). பங்களாதேஷ் போரில் கிடைத்த வெற்றியினால் இந்திராவுக்கு அந்தத் தேர்தலில் பூரண ஜெயம். மீண்டும் பிரதமரானார். இந்திய அரசியலமைப்பின் இருபத்தாறாவது சட்டதிருத்தத்தைக் கொண்டு வந்தார் இந்திரா. அதில் மன்னர் மானிய ஒழிப்பு தீர்மானம் இரு அவைகளிலும் நிறைவேறியது.

1971, டிசம்பரில் அது சட்டமாகியது. அவர்களின் பட்டங்களும் பறிக்கப்பட்டன. 'நாங்கள் மன்னர்களின் ஆடம்பரத்தைப் பறித்துவிட்டோம். ஆனால், அவர்கள் மனிதர்களாக வாழ வாய்ப்பு கொடுத்திருக்கிறோம்' - இந்திரா சொன்னார். 'சுதந்திரத்தின்போது இந்தியாவைக் கட்டமைக்கும் சக சிற்பிகள் என்று சொன்னீர்கள். இப்போது ஏதுமில்லாதவர்களாக்கி விட்டீர்கள்' - பரோடா மகாராஜா பஃதேசிங் புலம்பினார். 'எங்களைத் தீண்டத் தகாதவர்களாக்கி விட்டீர்கள்' - கதறினார் ஜோத்பூர் மகாராஜா கஜ்சிங்.



வருடம் 192 ரூபாய் மானியமாகப் பெற்றுவந்த கட்டோடியா ராஜா, அதையும் இழந்தபின் சோற்றுக்கு என்ன செய்தார்? ஓர் அலுவலகத்தில் குமாஸ்தாவாக வேலைக்குச் சேர்ந்தார். ராஜா, தனது ஓட்டை சைக்கிளில் அலுவலகத்துக்குச் செல்லும்போது யாரும் அவருக்கு வணக்கம் வைக்கவில்லை.

முகிலின். "அகம் புறம் அந்தப்புரம்" என்ற நூலில் இருந்து...

# எனக்கு திமிர் இருக்கிறது



**கேள்வி:** சிவாஜியுடன் நடித்த அனுபவம் குறித்து ?

**பதில்:** இன்றும்கூட என்னால் நம்ப முடியாத வாய்ப்பு அது. தாவணிக் கனவுகள் படத்தில் நான் உதவி இயக்குனர். சிவாஜியுடன் ஒரு காட்சியில் நடிக்கும் வாய்ப்பு கிடைத்தது. பொதுவாக உதவி இயக்குனர்களின் நடிப்பு மீது பிறருக்கு நம்பிக்கை இருக்காது.

சிவாஜி என்னிடம் சொன்னார் - நீ நடிப்பதில் எனக்கு பிரச்சனை இல்லை. நான் ரத்த வாந்தி எடுப்பதாக காட்சி. நீ சொதப்பிவிட்டால் மீண்டும் காட்சியை எடுக்க மூன்று மணி நேரம் ஆகும். தயாரிப்பாளருக்கு நஷ்டம். கவனமாக நடி என்றார். எந்த தவறும் இன்றி நடித்தேன். கை கொடுத்து பாராட்டினார் - "என்னப்பா. நாடக அனுபவம் கை கொடுத்ததா" என்றார். என் நடிப்பை பார்த்தே என் நாடக அனுபவத்தை கணித்தாரே. அதுதான் மேதைமை. அவருடன் நடித்து விட்டேன் என்ற திமிர் என்னிடம் எப்போதும் உண்டு

**-நடிகர் பார்த்திபன் பேட்டி**

# நம்பிக்கைகள்

■ விஷ்ணு

ஒரு கன்னா பின்னா தொடர் - 29

**உலகம் முழுவதும் மத, இன வேறுபாடின்றி பல்வேறு நம்பிக்கைகள் நிலவி வருகின்றன. இவற்றை ஒரு தரப்பினர் உண்மையானவை என்றும் மற்றொரு தரப்பினர் மூட நம்பிக்கை எனவும் சொல்கின்றனர்.**

இவை நம்பிக்கைகளா அல்லது மூட நம்பிக்கைகளா என்பது அவரவர் மனதையும், அவர்கள் சார்ந்திருக்கும் மதம் மற்றும் இனத்தை பொறுத்தும் அமைகிறது.

நம்பிக்கையும், மூடநம்பிக்கையும் மனிதனோடு பிறந்து மனிதனோடு அழிவதாகும். இயற்கையின் புதிரான செயல்களை உணர இயலாத நிலையிலும், திடீர் நிகழ்வுகளுக்குச் காரணம் அறியாத நிலையிலும், மனிதமனம் தன்போக்கில் பதிவுசெய்து கொண்ட காரண காரியங்களே நம்பிக்கைகள் ஆகும்.

நம்பிக்கைகளின் நம்பகத் தன்மை, செயல்பாடு இவற்றின் அடிப்படையில் நம்பிக்கைகளை, நம்பிக்கை, மூட நம்பிக்கை என பிரிக்கலாம்.

மூடநம்பிக்கைகள் என்று நாம் நினைக்கும் பல விஷயங்கள், அவற்றை நம்புபவர்களுக்கு உண்மையானதாக இருக்கிறது.

சிந்து சமவெளியில் வசித்த பழங்குடி இனத்தவர் தாங்கள் புலிகளாகவோ, பாம்புகளாகவோ மாறமுடியும் என்று நம்பினர். ஆன்மாவில் பாதி மட்டும் வெளியே சென்று மிருக உரு எடுத்து, எதிரியைக் கொல்ல முடியும் அல்லது ஆடு, மாடுகளை சாப்பிட்டு பசியாற்றிக் கொள்ள முடியும் என்று அவர்கள் நம்பினர். இப்படி பாதி உயிர் வெளியே போகையில் சோம்பேறியாகி விடுவர் அல்லது வேலையே செய்யாமல் சோர்ந்துவிடுவர் என்பது அவர்கள் நம்பிக்கை.

ஒடிசாவின் பழங்குடி இனத்தவர்களான கோண்ட் இனத்தினர் வேட்டைக்கு புறப்படும்போது எதிரில் பெண்கள் வந்தால் அபசகுணம் என்ற நம்பிக்கை உடையவர்கள். உடனே வீட்டிற்குப் போய்விட்டு, எல்லாப் பெண்களையும் மறைந்திருக்கும்படி சத்தம் கொடுத்துவிட்டு வெளியே வருவர்.

கோண்டு இனப்பெண் மாதவிலக்கு காலத்தில் அந்த வீட்டிலுள்ள யாரும் வேட்டைக்கு போக மாட்டார்கள். அப்படிப்போனால் ஒரு மிருகமும் சிக்காது என்பது அவர்களுடைய (மூட) நம்பிக்கை!

கோண்டு இன மக்கள் காகத்தை கொல்ல மாட்டார்கள். அவர்களின் நம்பிக்கையின்படி, காகத்தை கொன்றால்

ஒரு நண்பனை கொன்றதற்கு சமம்! இதற்கு ஒரு கதை சொல்லுவார்கள். கடவுள் உலகத்தைப் படைத்த காலத்தில் ஒர் வயதான ஆணும் பெண்ணும் அவர்களுடைய ஐந்து பிள்ளைகளுடன் வசித்துவந்தனர். கொள்ளை நோய் வந்து ஒருவர் ஒருவர் பின் ஒருவராக ஐந்து பிள்ளைகளும் இறந்தார்கள். பெற்றோர்களோ மிகவும் வயதானவர்கள்; வறியவர்களும் கூட.. ஆகையால் சடலங்களை எடுத்துச் சென்று தகனம் செய்ய இயலவில்லை. சடலங்களை வீட்டிற்கு அருகிலேயே தூக்கி எறிந்துவிட்டனர்.

ஒரு நாள் இரவில் அவர்களுடைய கனவில் விஷ்ணு தோன்றினார். ஒரு காகத்தைப் படைப்பதாகவும், அது இறந்தவர்களின் சடலத்தைத் தின்றுவிடும் என்றும் கனவில் சொன்னார். ஆகையால் காகங்கள் நண்பர்கள்.

குறவர்களில் ஒரு பிரிவினர் கள்ளர்களாக இருந்திருக்கின்றனர். இவர்கள், திருடப் போவதற்கு முன் சகுணம் பார்ப்பார்கள். ஏழு என்ற எண் அவர்களுக்குத் துரதிர்ஷ்டமானது. ஆகையால் ஏழு பேராகச் செல்லமாட்டார்கள். அப்படி ஏழு பேராகச் செல்ல நேர்ந்தால், கன்னம் வைக்கப் பயன்படும் கருவியை ஒரு ஆளாகக் கருதி எட்டு பேர் என்று சொல்லிக் கொள்வார்கள்.

போகும் வழியில் விதவை, பால் பானை, மாடு கத்துதல் ஆகியாவற்றை அப சகுணமாக கருதுவர். திருமணமாகி வந்தவன், சிறையில் இருந்து வந்தவன் ஆகியோரை திருட்டுக் கும்பலில் சேர்க்க மாட்டார்கள்.

கணவன்மார்கள் நீண்ட நாட்களாக திரும்பாவிட்டால், அவர்களின் மனைவிகள், உடனே ஒரு விளக்குமாற்றுக் குச்சியை எடுத்து, அதில் மேலும் பல குச்சிகளைக் கட்டி எண்ணெய்யில் தோய்த்து தண்ணீரில் மிதக்க விடுவர். அது தண்ணீரில் மிதந்தால் கவலைப்பட தேவை இல்லை. மூழ்கிவிட்டால் கணவனைத் தேடி மனைவி புறப்பட்டுவிடுவாள்.

இந்திய நாட்டைப் பொறுத்தவைர பல்வேறு நம்பிக்கைகள் இருக்கின்றன. சூரிய அஸ்தமனத்திற்கு பின் தரையை பெருக்கக் கூடாது, செவ்வாய்க்கிழமைகளில் முடி வெட்டக் கூடாது, இருட்டிய பிறகு பூக்களை பறிக்க கூடாது, இறுதிச் சடங்கில் கலந்து கொண்ட பின், குளிக்காமல் வீட்டுக்குள் வரக் கூடாது போன்ற நம்பிக்கைகள் உலவுகின்றன.

மேலும், மிளகாய் அல்லது உப்பை யாருடைய கையிலும் நேரடியாக கொடுக்க கூடாது. வீட்டை விட்டு வெளியே புறப்படும்போது, பூனை குறுக்கே சென்றால் அபசகுணம், சூரிய அஸ்தமனத்திற்கு பிறகு நகம் வெட்டுவது அபசகுணம், வெளியே செல்லும்போது விதவை பெண்களை பார்த்தால் அபசகுணம் போன்ற பல்வேறு நம்பிக்கைகளை இந்திய சமூகம் கொண்டிருக்கிறது.



இவை, உண்மையான நம்பிக்கைகள் அல்லது மூட நம்பிக்கைகள் என அவரவர் எண்ணப்படி முடிவெடுத்து கொள்கின்றனர். சிலர், இவற்றுக்கு விஞ்ஞான மற்றும் ஆன்மிக விளக்கங்கள் கொடுக்கின்றனர்.



உதாரணத்துக்கு சிலவற்றைப் பார்க்கலாம்.

### கிரகணத்தின் போது வெளியே வரக்கூடாது

இந்துக்களை பொறுத்தவரை கிரகணத்தின் போது வீட்டை விட்டு வெளியே வரக்கூடாது என்று சாஸ்திரம் சொல்கிறது. இதை இந்துக்களின் வீடுகளில் கறாராக கடைபிடிக்கிறார்கள். அந்த நேரத்தில் கிரகணத்தை நேரடியாக பார்க்க வீட்டிலுள்ள பெரியவர்கள் அனுமதிக்க மாட்டார்கள்.

குறிப்பாக இந்நேரத்தில் கர்ப்பிணி பெண்கள் வீட்டிற்குள் தான் இருக்க வேண்டும்; அப்போது தான், அவர்கள் வயிற்றில் உள்ள குழந்தை எந்தவித குறைபாடும் இல்லாமல் பிறக்கும். அதே போல் கிரகணத்தின்போது உணவருந்தவோ, சமைக்கவோ கூடாது எனவும் நம்பப்படுகிறது.

சில வீடுகளில் ஒவ்வொரு உணவு பண்டத்தின் மீதும் துளசி இலை போடுவார்கள். இதனால் அந்த உணவுகள் கெட்டுப் போகாமல் இருக்கும் என்பது அவர்களின் நம்பிக்கை.

"கிரகணத்தை நேரடியாக உங்கள் கண்களால் பார்த்தால், சூரிய ஒளியின் தீவிரத்தால் உங்கள் விழித்திரை வெகுவாக பாதிக்கப்படும். ஒளி உணர் அணுக்களுக்கும், கம்பிகளுக்கும் பாதிப்பு ஏற்படுவதால், சில நேரங்களில் விழித்திரையில் எரிச்சல் கூட உண்டாகலாம்.

மேலும் கிரகணத்தின்போது, நுண்ணுயிரிகள் முனைப்புடன் செயல்பட்டு உணவுகளை கெடச் செய்யும். அதனால் உணவுகளில் துளசி இலையை போடும் போது, அதிலுள்ள மருத்துவ குணங்களால் உணவுகள் கெட்டுப் போகாமல் இருக்கும்" என்று விஞ்ஞானப்பூர்வமாக விளக்கம் அளிப்பவர்களும் இருக்கின்றனர்.

வடக்கை நோக்கி தலை வைத்து படுக்காதீர்கள் என்று பெரியவர்கள்

சொல்வார்கள். இதற்கு காரணம், வடக்கு திசையில் தலை வைத்து படுக்கும்போது, அது வட துருவம் என்ற காரணத்தினால், உங்கள் தலை ஒரு காந்தமாக செயல்படும். தூங்கும்போது வடக்கு திசையை நோக்கி தலை இருந்தால், உடலின் வட துருவமும் பூமியின் வட துருவமும் ஒன்றோடு ஒன்று தள்ளும். இதனால் உங்கள் இரத்த ஓட்டம் பாதிக்கப்படும்.

இதுபோல ஒவ்வொரு விஷயத்துக்கும் ஒரு ஆன்மிக மற்றும் விஞ்ஞான விளக்கங்களை சொல்கிறார்கள்.

இந்தியாவை பொறுத்தவரை, எண்ணற்ற மதங்கள், இனங்கள், மொழிகள் என இருப்பதுபோல, பல்வேறு நம்பிக்கைகளும் இருக்கின்றன. அதைப் பற்றி பின்னாளில் பார்ப்போம்.

அமெரிக்காவில் மரணம் தொடர்பான நம்பிக்கைகள் நிறைய உள்ளன.

### குடை சென்டிமென்ட்

அமெரிக்காவில் ஒரு பிரிவினர், மழை நேரத்தில், வீட்டுக்கு வெளியே சென்று மழையில் நனைந்து கொண்டுதான் குடையை விரிப்பர். அதேபோல், திரும்பும் போது மழையில் குடையை மடக்கி நனைந்தபடிதான் வீட்டுக்குள் நுழைவர்.

குடையை விரித்தபடி வீட்டுக்கு நுழைந்தாலோ, வீட்டை விட்டு வெளியேறினாலோ அந்த வீட்டில் இருக்கும் யாராவது ஒருவர் இறந்து விடுவார் என்பது அவர்கள் நம்பிக்கை.

### தொப்பி

தொப்பி குறித்த சில நம்பிக்கைகளும் அமெரிக்க பூர்வகுடிகளிடம் வழக்கத்தில் உள்ளது. தொப்பியை படுக்கையில் வைத்துக் கொண்டு தூங்கக் கூடாது. மீறி யாராவது தூங்கினால், காலையில் எழும்போது, அந்த வீட்டில் மரணம் நிகழும் என்பது அவர்களின் நம்பிக்கை.

### வாசலுக்கு நேரகாக கால் நீட்டக் கூடாது

ஹவாஸ் தீவு மக்கள், கதவுக்கு நேராக கால் நீட்டி படுத்து தூங்க மாட்டார்கள். அப்படி தூங்கினால், இரவில் அவர்கள் கால் வழியாக உயிர் இறங்கி வாசல் வழியாக போய்விடும் என்பது நம்பிக்கை. அதேபோல், காலணிகளை வீட்டில் அணிந்து நடந்தால் வீட்டிற்குள் பேய் உலவும் என்பதும் இவர்களின் நம்பிக்கை.

### கல்லறை வழியாகக் போகக் கூடாது

அமெரிக்காவில் சில பிரிவினர், கல்லறை வழியாக நடக்க வேண்டுமென்றால் உயிரே போவது போல் பயப்படுவர். கல்லறை வந்தவுடன் மூச்சைப் பிடித்துக் கொண்டு வேகமாக நடப்பர். இதற்கு அவர்கள் சொல்லும் காரணம் வேடிக்கையானது.

இறந்து போனவர்கள் உயிரோடு நடந்து வருபவர்களை பார்த்தால் பொறாமைப்படுவர். தங்களது மூக்கைத் தொட்டுப் பார்த்துக் கொள்வர். “அவனுக்கு மட்டும் மூச்சு இருக்கு, எனக்கு இல்லையே’



என்று கோபப்பட்டு “பளார்’ என்று கன்னத்தில் அறைவார்களாம்.

உயிரோடு இருப்பவருக்கு அந்த அறை விழுந்த மறுகணமே உயிர் போய்விடுமாம். இந்த நம்பிக்கை காரணமாகத்தான் அவர்கள் மரண பயத்துடன் கல்லறையை கடப்பார்கள்.

### தும்மல்

அமெரிக்கர்கள், அருகில் இருக்கும் யாராவது தும்மி விட்டால் ‘கடவுள் உங்களை ஆசீர்வதிப்பாராக’ என்பார்கள். தும்மும்போது ஆன்மா வெளியேற முயல்வதாகவும், கடவுள் உன்னை ஆசீர்வதிப்பாராக என்று சொல்லும்போது ஆன்மா மீண்டும் உடலுக்குள் செல்வதாகவும் அவர்களின் நம்பிக்கை.

துவக்க காலத்தில் அமெரிக்க பழங்குடிகள், கொட்டாவி விடும் போது வாயை மூடிக்கொள்வார்கள். காரணம், வாயைத் திறந்தால் சாத்தான் உள்ளே நுழைந்துவிடுவான் என்பதற்காகத்தான்.

மின்சாரம் கண்டுபிடிப்பதற்கு முன்பெல்லாம் மின்னல் என்பதும் இடி என்பதும் வானத்தில் இருந்து சாத்தான் எறிபவை என்று தான் அமெரிக்க கிறிஸ்தவர்களின் நம்பிக்கையாய் இருந்தது. எனவே மழைக்காலங்களில் அவர்கள் சாத்தானைப் பயமுறுத்துவதற்காக ஆலயத்துக்கு ஓடிச்சென்று ஆலயமணியை அடித்துக் கொண்டே இருப்பது வழக்கம்.

ஆலயம் மற்ற கட்டிடங்களை விட அதிக உயரமுடைய கோபுரத்தைக் கொண்டிருப்பதால் அடிக்கடி ஆலயங்களில் மின்னல் தாக்கி மணி அடிப்பவர்களை மரணம் அடைய செய்வதும் உண்டு. அதையெல்லாம் சாத்தான் அடித்து செத்ததாகவே மக்கள் நம்பினார்கள்.

சாப்பிடும்போது தும்மினால் யாரோ உங்களை நினைக்கிறார்கள் என்று தமிழர்களாகிய நாம் சொல்வது போல, மூக்கு அரித்தால் யாரோ நம்மை

நினைக்கிறார்கள் என்பது அமெரிக்கர்களின் வழக்கமாக இருக்கிறது.

அதேபோல உள்ளங்கை அரித்தால் பணம் வரும் என்று நாம் சொல்வது போல அமெரிக்கர்களும் சொல்கிறார்கள். இடது உள்ளங்கை அரித்தால் பணம் வரும், வலது உள்ளங்கை அரித்தால் பணம் போகும் என்பது அவர்கள் நம்பிக்கை.

வெளியே செல்லும்போது, பூனை குறுக்கே வந்தால் சகுணம் சரியில்லை என்று இந்துக்கள் நம்புவதைப் போல, அமெரிக்காவிலும் சில பிரிவினரிடம் பூனை குறுக்கே வந்தால், போன காரியம் வெற்றியடையாது என்னும் நம்பிக்கை இருந்திருக்கிறது.

கத்தியையோ, தாவரங்களையோ பெற்றுக் கொள்ளும்போது நன்றி சொல்லக் கூடாது. அப்படிச் சொன்னால் கத்தியினால் ஏதேனும் காயம் படுதலும், தாவரம் பட்டுப்போவதும் தவிர்க்க முடியாது என்பதும் அமெரிக்கர்களின் நம்பிக்கைகளில் ஒன்று.

அப்படி கத்திக் காயத்தில் இருந்து தப்ப வேண்டுமானால், கத்தியைப் பெற்றுக் கொள்ளும்போது கொஞ்சம் பணத்தையும் கூடவே கொடுக்க வேண்டும் என்று நம்புகின்றனர்.

இரவில் தூங்கும்போது எந்தப் பக்கமாகப் படுத்தோமோ அந்தப் பக்கமாகவே எழும்புதல் நன்மை பயக்கும் என்பதும் அவர்களின் நம்பிக்கை. யாராவது படுத்திருக்கும்போது அவர்களை தாண்டிப்போகக் கூடாது. அப்படி தாண்டிப்போனால் அவர்களுடைய வளர்ச்சி பாதிக்கும் என்றும் அமெரிக்கர்கள் நம்புகின்றனர்.

அதேபோல், அதிகாலையில் காணும் கனவு பலிக்கும் என்று இந்தியர்கள் நம்புவதைப் போல, இரவில் காணும் கனவை, காலை உணவுக்கு முன் சொல்லி விட்டால் அந்தக் கனவு பலிக்கும் என்பது அமெரிக்கர்களின் நம்பிக்கை.

அமெரிக்கர்கள் பல விஷயங்களை நம்புவது போல, சுறுசுறுப்புக்கும், உழைப்புக்கும் பெயர் பெற்ற ஜப்பானியர்களின் மத்தியிலும் பல விசித்திரமான நம்பிக்கைகள் இருக்கின்றன.

ஜப்பானியர்கள், வடக்குப் பக்கம் தலை வைத்து படுக்க மாட்டார்கள்.

அவர்களை பொறுத்தவரை வடக்கு என்பது இறந்தவர்களின் திசை. இறந்தவர்களை மண்ணில் புதைக்கும் போது வடக்கு பக்கம் தலை இருப்பது





போலத்தான் புதைப்பர். வாழ விரும்புபவர்கள் வடக்கு பக்கம் திரும்பவே மாட்டார்கள்.

இந்தியாவிலும் வடக்கு பக்கம் தலைவைத்து படுக்கமாட்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இதற்கு அறிவியல் காரணம் இருக்கிறது.

பூமி மிகப்பெரிய காந்தம். காந்தத்தின் குணாம்சமே ஒத்த துருவங்கள் விலகிச்செல்லும். எதிரெதிர் துருவங்கள் ஈர்த்துக்கொள்ளும். மனித உடலில் மூளையை வடக்கு என்றும் பாதத்தை தெற்கு என்றும் சொல்வார்கள். இதனால்தான் வடக்கே தலை வைத்துப் படுக்கும்போது, வடக்கில் காந்தமண்டலம் இருப்பதால், அது நம்முடைய மூளையில் உள்ள நரம்பு மண்டலத்தை பாதிக்கிறது. எனவேதான் வடக்கில் தலை வைத்து படுக்கக்கூடாது என்றனர்.

### ஆசைகள்

பெரிய ஆசைகள் மற்றும் கனவுகளை பற்றி ஆசைப்படும்போது, கோவில்களில் சென்று அதைப் பற்றி வேண்டிக் கொண்டால், நினைத்தது நடக்கும் என்பது நம்பிக்கை.

### மிதியடிகள்

வீடுகளில் வைக்கப்படும் கால் மிதியடிகளின் ஓரத்தில் மிதிக்க கூடாது என்று சொல்வார்கள். அவ்வாறு மிதித்தால் தன் தாய், தந்தையரின் தலையில் மிதிப்பதற்கு சமம் என்று நம்புகின்றனர்.

### பாம்பு தோல்

ஜப்பான் நாட்டு மக்களிடையே ஒரு வினோதமான பழக்கம் வழக்கத்தில் உண்டு. பாம்புக்கறியை கன்னாபின்னாவென்று வெட்டும் ஜப்பானியர்கள், பாம்பு தோலை மிகவும் புனிதமானது என்று நம்புகின்றனர். பாம்பு தோலை சிறு சிறு துண்டுகளாக வெட்டி பர்ஸிலும், பெண்களின் கைப்பையிலும், வீட்டில் பணம் வைக்கும் பீரோக்களிலும் வைத்துக்கொள்கிறார்கள்.

அப்படி வைத்துக்கொண்டால் பணம் பெருகி பல மடங்கு ஆகிக்கொண்டே இருக்கும் என்பது அவர்களின் நம்பிக்கை. அதுவும் வெள்ளை பாம்பின் தோல் என்றால் இன்னுமும் ஸ்பெஷல். எவ்வளவு விலை கொடுத்தும் வாங்க ஜப்பானியர்கள் தயாராக இருப்பார்கள்.

உலகம் முழுவதும் ஏராளமான மதம் சார்ந்த நம்பிக்கைகள் இருக்கின்றன. அவற்றை அடுத்தடுத்த இதழ்களில் காண்போம். ●

# தயக்கம்

ஹரி

**கடற்கரை ஓரமாக பெரிய மரம் ஒன்று வளர்ந்திருந்தது. அதன் கிளை ஒன்று மிக நீண்டு கடல் நீருக்கு மேலாக நீட்டிக் கொண்டிருந்தது. அதன் உச்சியில் கடற்குருவி ஒன்று கூடு கட்டியது. அதனுள் நாலைந்து முட்டைகளை இட்டு அடைகாத்து வந்தது.**

ஆண் குருவியும் பெண் குருவியும் அதே கூட்டில் வசித்தபடி, தங்கள் குஞ்சுகள் வெளிவரும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தன.

ஒரு நாள் பெரும் காற்று வீசியது. பெரிய அலைகள் பொங்கி எழுந்தன. கிளையில் இருந்த கூடு நழுவி காற்றின் வேகத்தில் கடலில் விழுந்து மூழ்கியது. குருவிகள் மனம் பதறிக் கதறின. கடல் நீரில் விழுந்து கூடு மூழ்கிய இடத்திற்கு மேலாக கீச், கீச் என்று கத்தியபடியே சுற்றிச் சுற்றி வந்தன.

பெண் குருவி மனம் உடைந்து, "எப்படியாவது முட்டைகளை மீண்டும் நான் காண வேண்டும். இல்லையேல் நான் உயிர் வாழ மாட்டேன்" என்று கூறியது.

அதற்கு ஆண் குருவி, "அவசரப்படாதே ஒரு வழி இருக்கிறது. நமது கூடு கரையின் ஓரமாகத் தான் விழுந்துள்ளது. கூட்டுடன் சேர்ந்து முட்டைகள் விழுந்ததால் நிச்சயம் உடைந்திருக்காது. அதனால் இந்த கடலிலுள்ள தண்ணீரை வற்றவைத்து விட்டால் போதும். முட்டைகளை நாம் மீட்டுவிடலாம். என்று பெண் குருவிக்கு தன்னம்பிக்கை ஊட்டியது .

"கடலை எப்படி வற்றவைப்பது?

"முட்டைகள் பொரிந்து குஞ்சுகள் வெளிவர இன்னும் பல நாட்கள் ஆகலாம். எனவே நாம் இடைவிடாமல் சில நாட்கள் முயல வேண்டும். நம் வாயில் கொள்ளும் மட்டும் தண்ணீரை எடுத்துக் கொண்டு பறந்து சென்று தொலைவில் கொட்டுவோம். மறுபடியும் திரும்பி வந்து மீண்டும் நீரை நிரப்பிக் கொண்டு போய் தொலைவில் உமிழ்வோம்.

இப்படியே இடைவிடாமல் செய்து கடல் நீரை வேறு இடத்தில் ஊற்றினால் கடல் நீர் மட்டம் குறைந்து தரை தெரியும். நமது முட்டைகள் வெளிப்படும்.

ஆண் குருவியின் சொற்களைக் கேட்ட பெண் குருவி கொஞ்சம் கூட தயங்கவே இல்லை. களத்தில் இறங்கியது. இரண்டு குருவிகளும் தன்னம்பிக்கையுடன், ஊக்கத்துடன் செயலில் இறங்கின. விர்ரென்று பறந்து போய் தங்களது சிறிய அலகில் இரண்டு விழுங்கு நீரை நிரப்பிக் கொண்டன. பறந்து சென்று தொலைவில் போய் உமிழ்ந்தன. மீண்டும் பறந்து வந்து இரண்டு வாய் தண்ணீரை அள்ளின. கொண்டுபோய் தொலைவில் துப்பின.

.இப்படியே இரவு பகல் நாள் முழுவதும் இடைவிடாமல் செய்தன. அப்போது அந்தக் கடற்கரை ஓரமாக முனிவர் ஒருவர்

நடந்து வந்து கொண்டிருந்தார். மகா சக்திகள் நிறைந்த மகான் அவர். ஆளில்லாத அந்தப் பகுதியில் கீச் கீச் என்ற சப்தம் கேட்கவும் அவர் திரும்பிப் பார்த்தார்.

இரண்டு குருவிகள் கடல் நீரை குடிப்பதும், தொலைவில் கொண்டு போய் துப்புவதையும் கண்டார். தன் ஞானதிருஷ்டியால் நடந்ததை அறிந்தார். அவர் மனம் உருகியது. முட்டைகளை இழந்த தாயின் தவிப்பும், கடலையே வற்ற வைத்தாவது முட்டைகளை மீட்க வேண்டும் என்ற அதன் துடிப்பும் அவரது உள்ளத்தை நெகிழச் செய்தது.

உடனே தனது தவ பலத்தை ஒன்று திரட்டிய முனிவர் கையை உயர்த்தினார். மறுகணம் கடல் சில அடிகள் பின் வாங்கியது. அங்கே கூட்டுடன் இருந்த முட்டைகள் தென்பட்டன. குருவிகள் அதைப் பார்த்து குதூகலத்துடன் கீச்சிட்டன. ஆளுக்கொன்றாக முட்டைகளை பற்றிக் கொண்டு போய் வேறிடத்தில் சேர்த்தன.

“நான் அப்போதே சொன்னேன் பார்த்தாயா? நமது ஒரு நாள் உழைப்பில் கடல் நீரை குறைத்து முட்டைகளை மீட்டு விட்டோம் பார்த்தாயா? என்றது ஆண் குருவி பெருமிதமாக. முனிவர் சிரித்தபடி தொடர்ந்து நடந்தார்.

இரண்டு குருவிகள் தங்கள் முட்டைகளை மீட்டது அவற்றின் உழைப்பால் இல்லை, முனிவரின் தவவலிமையால் தான் என்றாலும், கடலை வற்றச் செய்ய முனிவரை தூண்டியது எது? குருவிகளின் நம்பிக்கைதான்.

அந்த குருவிகள் தங்கள் முட்டைகளை மீட்க எதுவும் செய்யாமல் இருந்தால் அந்த முனிவருக்கு நடந்தது எதுவும் தெரியாது. அவர் தன் வழியே போயிருப்பார்.

கடல் நீரை தங்களால் வற்றச் செய்ய முடியாது என்று அந்த குருவிகள் தயங்கி இருந்தால், அவற்றுக்கு நம்பிக்கை ஏற்பட்டிருக்காது. கடல்நீரை தங்கள் அலகால் அப்புறப்படுத்த முயற்சித்திருக்காது. அப்படி செய்யாமல் இருந்திருந்தால் முனிவரின் பார்வையில் பட்டிருக்காது.

குருவிகளின் தயக்கத்தை உடைத்த நம்பிக்கைத்தான், அவற்றின் முட்டைகளை மீட்க உதவியது.

உலகம் முழுவதும் மூவரில் ஒருவருக்கு தயக்க மனப்பான்மை இருப்பதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

இவர்களின் அறிவுத்திறன், தனித்தன்மை, திறமை, ஆற்றல் போன்றவை இந்த தயக்கத்தால் அடிபட்டு போகின்றன. தயக்கத்தால் வெற்றி வாய்ப்புக்கான



அத்தனை வழிகளையும் இவர்களே அடைத்து விடுகிறார்கள்.

இவர்கள் பார்ப்பதற்கு அமைதியாக இருப்பது போல தோன்றினாலும், ஒவ்வொரு அடியையும் எடுத்து வைப்பதற்கு முன், இவர்களுக்குள் ஒரு போராட்டமே நடந்து கொண்டிருக்கிறது. மனதுக்குள் பதற்றம், தடுமாற்றம், பயம் என பல்வேறு உணர்ச்சி கலவைகளால் இவர்கள் தயங்கி நிற்கிறார்கள்.

வாழ்க்கையின் முக்கிய கட்டத்தை பற்றி முடிவெடுக்கும் நிலையில், தயக்கம் வந்து இவர்களை தடுமாற வைக்கிறது. மேற்கொண்டு முடிவெடுக்க முடியாமல் இழுத்து பிடித்து நிறுத்தி விடுகிறது.

இந்த தயக்கத்தால் அவர்களுக்கு கிடைக்கும் பரிசு என்ன தெரியுமா? தோல்வி.

இந்த தயக்கத்துக்கு விஞ்ஞான ரீதியான விளக்கமும் கொடுக்கிறார்கள் ஆய்வாளர்கள். ‘ஆக்ஸைடோசின்’ என்ற ஹார்மோன் குறைபாடு ஒரு மனிதனுக்கு தயக்கத்தையும், கூச்சத்தையும் கொடுக்கிறதாம்.

‘ஆக்ஸைடோசின்’ என்பது கணவன்-மனைவி இணையும் போதும், குழந்தைப் பிறப்பின் போதும் உடலில் சுரக்கும் ஒரு ஹார்மோன். இது தான் தாக்கும் சேக்குமான உறவு இறுக்கத்துக்கும் காரணியாக இருக்கிறது என்பது குறிப்பிடத் தக்கது.

அதனால் தான் பிள்ளைகள் தந்தையை விட, எந்த வித தயக்கமும் இன்றி தங்கள் தாயிடம் ஒட்டிக் கொள்கின்றன. வெளிப்படையாக பேசுகின்றன. மகிழ்ச்சியாக இருந்தாலும், கோபமாக இருந்தாலும் உடனடியாக அது தாயிடம் கொட்டி விடுகின்றன.

இந்த ஹார்மோன் உங்களுக்கு தேவையான அளவு சுரக்க என்ன செய்ய வேண்டும் தெரியுமா? மனம் முழுவதும்





தன்னம்பிக்கையை நிரப்பிக் கொண்டால் போதும்! இந்த ஹார்மோன் தேவையான அளவு சுரந்து, தயக்கத்தை விரட்டி அடித்து விடும்.

ஓட்டப் பந்தையத்தில் வெடி சத்தம் கேட்டவுடன் எவன் ஒருவன் அம்பில் இருந்து புறப்பட்ட வில்லை போல தயக்கமே இல்லாமல் ஓடத் தொடங்குகிறானோ, அவனே வெற்றி இலக்கை அடைகிறான்.

தயக்கத்தை உதறியவனுக்குத்தான் வெற்றி தேவதை காட்சி தருகிறாள்.

பொதுவாக, தயக்கம் என்பது, அறிமுகம் இல்லாதவரிடம் ஆறு முதல் எட்டு நிமிடங்கள் வரையும், அறிமுகமானவர்களிடம் இரண்டு முதல் ஐந்து நிமிடங்கள் வரையும் நீடிப்பதாகச் சொல்கின்றன மனநல ஆய்வுகள். அந்த நிமிடங்களைத் தைரிய மாகத் தாண்டிவிட்டால் எந்தப் பிரச்சனையும் இல்லை. இந்த நேரத்தைச் சாதகமாக மாற்றத் தெரியாவிட்டால் அதுவே உங்களுக்குப் பாரமாகி விடும். உங்களின் தயக்கத்துக்கு நீங்கள் மட்டும்தான் முழுமுதற் காரணம்.

'தயக்கம் என்பது ஒருவகையில் பலர் தங்களின் சௌகர்யத்துக்காக அவர்களே வளர்த்துக்கொள்ளும் ஒரு குணம்' என்கிறார்கள் மனோதத்துவ நிபுணர் கள்.

பொதுவாக, பிள்ளைகள் தங்கள் பிரச்சனைகளை பெற்றோர்களிடம் சொல்ல தயங்குவார்கள். இந்த தயக்கத்தால், தங்கள் பிரச்சனைகளை உள்ளுக்குள்ளேயே வைத்துக் கொண்டு அவர்கள் புழுங்குவார்கள். நாளடைவில், இது அவர்களுக்கு பெரும் பிரச்சனைகளை ஏற்படுத்திவிடும். அவர்களின் எதிர்காலத்தையே பாழடித்துவிடும். அவர்களின் தயக்கத்தை உடைக்கும் சூழ்நிலைகளை பெற்றோர்கள் தான் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும்.

அந்த நாட்டின் அரசன் மிகவும் சில நாட்களாக சோர்ந்து காணப்பட்டான். ஆனால் என்ன என்று யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. அவன் அரசன் என்பதால், அவனருகில் சென்று 'உங்களுக்கு என்ன பிரச்சனை?' என்று கேட்க எவருக்கும் தைரியம் இல்லை. அரசின் அரசவையில் இருந்த மந்திரிகளும் கூட அவனிடம் இது பற்றி கேட்பதில் தயக்கம் காட்டினர். ஆனால் மன்னனின் பிரச்சனையும், குழப்பமும் தீர வேண்டும் என்று அனைவரும் நினைத்தார்கள்.

மன்னனும் கூட தன்னுடைய மனக் குழப்பத்தை யாரிடம் சொல்வது என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தான். ஒரு நாள் மன்னனின் அரசவையில் உள்ள முதன்மை அமைச்சர் வந்து, 'அரசே! நீங்கள் வேட்டைக்குச் சென்று வெகுநாட்கள் ஆகிவிட்டதே' என்று, மன்னனின் மனநிலையை மாற்றும் நோக்கத்தில் கேட்டார்.

'ஆம்! நீண்ட நாட்கள் ஆகிவிட்டதுதான். ஆனாலும் இப்போது வேட்டையாடும் மனநிலையில் நான் இல்லை' என்றான் மன்னன். 'மனநிலை குழப்பமாக இருக்கும்போது தான் அரசே, வேட்டையாடச் செல்ல வேண்டும். புறப்படுங்கள்; அப்படியே போகிற வழியில் தானே நம் குருவின் குடில் இருக்கிறது. அவரையும் தரிசித்து விட்டுப் போகலாம்' என்றார் அமைச்சர்.

குரு என்று அமைச்சர் சொன்னதும், மன்னனின் மனம் துள்ளிக்குதித்தது. அவரிடம் சென்றால் மனக் குழப்பத்திற்கு மருந்து கிடைக்கும் என்று நினைத்த மன்னன் உடனடியாகப் புறப்பட்டான்.

இருவரும் குதிரையில் ஏறி குருவின் குடிலை நோக்கிச் சென்றனர். முதலில் மன்னனும், அமைச்சரும் சேர்ந்தே குருவை தரிசித்தனர். பின்னர் மன்னன் தனியாக குருவை சந்தித்து பேசினான். அப்போது அவன் மனதில் உள்ள குழப்பங்களை தெரிவித்ததுடன், அந்த குழப்பம் தீர தான் யோசித்து வைத்திருக்கும் தீர்வையும் சொன்னான்.

அவன் சொன்ன அனைத்தையும் அமைதியாக கேட்டுக் கொண்டிருந்த குரு, 'சரி.. நீ புறப்படலாம்' என்றார்.

மன்னன் அதிர்ச்சியடையவோ, குழப்பமடையவோ இல்லை. அவன் மனம் மகிழ்ச்சியில் திளைத்தது. மனம் தெளிவடைந்து உற்சாகத்துடன் குதிரை ஏறி வேட்டையாட காட்டிற்குச் சென்றான்.

மன்னன் சென்றதும், குடிலுக்குள் வந்த அமைச்சர், 'குருவே! மன்னரின் மனக்கவலை தீர நீங்கள் என்ன தீர்வு சொன்னீர்கள்?' என்று கேட்டார்.

அதற்கு குரு, 'நான் ஒன்றுமே சொல்லவில்லை. மன்னன் சொன்னதை காது








கொடுத்துக் கேட்டேன். அவன் கவலையை பகிர்ந்து கொண்டேன். அவன் தோள் சாய, என்னுடைய தோள் கொடுத்தேன். அவ்வளவுதான்' என்றார்.

பிள்ளைகளின் தயக்கத்தைப் பெற்றோர்கள் தான் போக்க வேண்டும். இதற்கு செய்வதெல்லாம் ஒன்றே ஒன்று தான். அவர்கள் சொல்வதை காதுகொடுத்துக் கேளுங்கள். உங்களிடம் வெளிப்படையாக பேசும் வகையில் அவர்களிடம் நட்பாக பழகுங்கள்.

ஒருவரின் வெற்றிக்கு முதல் தடைக்கல் எது தெரியுமா? தயக்கம் தான்.

'பொது இடத்தில் பேச தயக்கம்! நேர்முகத் தேர்வில் கலந்து கொள்ள தயக்கம், புதிய முயற்சிகளில் இறங்க தயக்கம்! ஏன்....காதலை சொல்லக்கூட தயக்கம் தான்! இந்த தயக்கத்தால் எத்தனை பேர் தங்களுக்கு கிடைத்த வாய்ப்பை கைநழுவி விட்டிருக்கிறார்கள் தெரியுமா!

தயக்கத்தை உதறியவனிடம் தான் வெற்றி நெருங்கும். சிலருக்கு எல்லாவற்றுக்குமே தயக்கம். இந்த தயக்கம் தான், வெற்றியை நோக்கி நாம் வேகமாக சென்று கொண்டிருக்கும் போது நமது காலை பிடித்து இழுக்கும் கயிறாக இருக்கிறது.

ஆசிரியர் கேட்கும் கேள்விகளுக்கு நமக்கு பதில் தெரிந்தாலும், அந்த பதில் தவறாக இருந்து விட்டால் எல்லோரும் சிரிப்பார்களே என்று 'தயக்கம்', நம்மை எழுந்திருக்க விடாமல் தலையில் தட்டி உட்கார வைத்துவிடுகிறது .

அடுத்தமாணவன்அரைகுறையாகபதில்சொல்லிகூட பாராட்டை பெறுகிறான்.



மாணவன் என்பது உதாரணம் தான். எல்லா துறையை சார்ந்தவர்களுக்கும் இது பொருந்தும். எந்த ஒரு காரியத்தையும் சிந்தித்தவுடன் செயல்படுத்தத் துவங்கி விட வேண்டும். அப்படி துவங்கி விட்டால் அதை வெற்றிகரமாக முடிப்பதற்குத் தேவையான அனைத்து உதவிகளும் தானே தேடி வரும்.

விழித்திருக்கும் நேரமெல்லாம் உழைத்துக் கொண்டிருங்கள். வாழ்வில் எல்லா நேரமும் நல்ல நேரம்தான். உழைக்காத நேரம்தான் கெட்ட காலம். திட்டமிடுங்கள். ஒவ்வொன்றையும் திட்டமிட்டு உழைத்திடுங்கள். எதற்கும் தயங்க வேண்டாம். தயக்கத்தை உதறுங்கள்.

ஒருவரின் வெற்றிக்கு பக்கபலமாக சில நண்பர்கள் இருப்பார்கள். தன்னம்பிக்கையும், விடா முயற்சியும்தான் அந்த நண்பர்கள்.

அதேபோல வெற்றிக்கு இரண்டு எதிரிகளும் உண்டு. தயக்கமும், முயற்சியின்மையும் தான் அவை. துணிச்சலை தோழனாக்கிக் கொண்டால் தயக்கம் எனும் எதிரியை விரட்டியடித்து தன்னம்பிக்கையை வளர்க்க முடியும். தயக்கத்தை விடவில்லை என்றால், வெற்றியின் இலக்கை நாம் தொட முடியாது.

தயக்கத்தை விரட்ட நேர்மறையான எண்ணங்களை வளர்த்துக் கொள்ள வேண்டும். என்னால் முடியும் என்று நம்புங்கள். இந்த நம்பிக்கை தரும் சொல், தயக்கத்தை விரட்டியடிக்கும். வெற்றியைத் தேடித்தரும். என்னால் முடியுமா? என்ற தயக்கம் தோல்வியைத்தான் தரும்.

கண்ணில் பட்ட சிறுமணல் எப்படி இந்த அழகிய உலகத்தைப் நம்மால் பார்க்க முடியாமல் செய்து விடுகிறதோ, அதைப்போல, சிறிய தயக்கம் அல்லது சந்தேகம்,இந்த வாழ்வின் பெருமை, அழகு,உங்கள் பலம் அனைத்தையும் மறைத்து விடும்.

கிராப்புறங்களில் ஒரு சொலவடை உண்டு. "நரிக்கு முன்பு நின்று கதை பேசிக் கொண்டிருந்தால், சிங்கத்துக்கு மதிப்பில்லாமல் போய்விடும்" என்பார்கள். சிங்கத்துக்கு இருக்கும் பலத்துக்கு, நரியிடம் பேசிக் கொண்டிருப்பதை விட, ஒரே அடியில் அதை வீழ்த்தவதுதான் சிங்கத்துக்கு பெருமை" என்பது இதன் அர்த்தம்.

இந்த இடத்தில் "தயக்கத்தை" நரி என்றும், சிங்கம் தான் நீங்கள் என்றும் நினைத்து கொள்ளுங்கள். தயக்கத்தை ஒரே அடியில் வீழ்த்துங்கள்.

# இந்த நட்சத்திரங்களை போல, நீங்களும் ஜொலிக்க வேண்டுமா?

"Citizen RJ/Reporter" பயிற்சித் திட்டத்தில் இணைந்து, 8கே ரேடியோவின் Citizen RJ-ஆகவும், 8கே தமிழ் எக்ஸ்பிரஸ் இதழின் Citizen Reporter - ஆகவும் பயிற்சி பெற விருப்பமா?

ஆர்வம் உள்ள யார் வேண்டுமானாலும் எங்களுடன் இணையலாம். வயது தடையில்லை. ஆர்வமும் திறமையும் இருந்தால் போதும்.

உங்கள் சுய விவரம் மற்றும் புகைப்படத்தை எங்களுக்கு அனுப்பி வையுங்கள்: editor@8ktamilexpress.com



**Ayswarya**
Atlanta



**kamal**
Arlington Heights, IL



**Dhivya Raj**
Dallas, Texas



**Harni**
New Jersey



**Priya Raman**
Atlanta, Georgia



**Sindhu Srinivasan**
Maryland



**Priyadarshini**
Manchester , Connecticut



**Magesh Elangovan**
Vermont



**Jayashree**
San Jose, California



**Yasodha**
New Jersey



**Shakthi arul,**
California



**Krishna**
Charlotte ,
North Carolina



**Hema**
Hicksville, Newyork



**Selvi Muthukumar**
Alpharetta, Atlanta



**Kurinji Meena**
California

